அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள. —241



திருவள்ளுவர்

போற்றும்

# 'அருட்செல்வம்' யாது?

புலவர் மு. தெய்வநாயகம்

தமிழ் இலக்கியக் கழகம்

# திருவள்ளுவர் போற்றும்
# அருட்செல்வம் யாது?



புலவர் மு. தெய்வநாயகம், பி.ஏ.,
தமிழ்த்துறை, இலயோலாக் கல்லூரி,
சென்னை-34.

தமிழ் இலக்கியக் கழகம்,
திருச்சி-620001.

# பதிப்புரை

செல்வத்துள் சிறந்த செல்வமாகிய அருட்செல்வத்தின் உட்பொருளைக் குறட்பாக்களில் உய்த்துணர்ந்து நூல் வடிவில் நமக்கு வடித்துத் தந்துள்ளார் புலவர் தெய்வநாயகம். பிற உரையாசிரியர்களின் கூற்றும் ஆசிரியரின் கருத்தை மெய்ப்பிக்க உதவுகின்றன என்பதைக் காணப் பலருக்கு வியப்பாயிருக்கலாம்.

அருள், கொல்லாமை, ஊனுண்ணாமை, அன்பு முதலியவற்றை ஒருங்கே இணைத்துத் தொகுத்து எழுதிய ஆசிரியரின் ஆய்வுத்திறன் போற்றற்பாலது. அவர் கூறுவனவற்றை யாவரும் ஏற்றுக்கொள்ளார் என்பது திண்ணம். எனினும், குறள் ஆய்வுக்குப் பலரை இட்டுச் செல்லுவதற்கு இந்நூல் பெரிதும் பயன்படும் என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை. எனவே, தமிழ் உலகம் இந்நூலை வாங்கிப் பயின்று குறட்பாக்களை இன்னும் மிகுதியாக நுணுகி ஆய்வு நடத்தும் ஆற்றல் பெறும் என நம்புகிறோம்.

திருச்சி,

*11-2-74.* தமிழ் இலக்கியக் கழகம்.

PHONE 27352

TAMIL NADU THEOLOGICAL SEMINARY
(AFFILIATED TO SERAMPORE UNIVERSITY)

THE REV. SAMUEL AMIRTHAM, M.A., D.TH.,
Principal and Secretary.

ARASARADI,
MADURAI - 625010,
S. INDIA.

8-3-'74

புலவர் தெய்வநாயகம் அவர்களின் முயற்சியால் திருக்குறள் ஆய்வு ஒரு புதிய திருப்பத்தினைக் கண்டுள்ளது. கிறித்தவத்திற்கும் வள்ளுவத்திற்கும் தொடர்பு உண்டு என ஆசிரியர் தமது ஆய்வின் வாயிலாகக் காட்டுகின்றார். பலரும் எதிர்பாராத, விரும்பாத முடிவெனும் காரணத்தால் ஆய்வு முறையினையும் ஆய்வு முடிபினையையும் பொறுமையுடன் சீர் தூக்கிப் பார்க்க முன்வருவோரும் முனைபவரும் சிலரே. குறள் ஆராய்ச்சியாளர்கள் நடுவுநிலை நின்று நிறுத்துப்பார்க்கும் அளவுக்குச் சிறப்பு வாய்ந்த பல நூல்களை ஆசிரியர் தமிழகத்திற்கு வழங்கியிருக்கின்றார்.

இந்நூலில் 'அருள் யாது, அருள் உடைமையுடையான் யார்? அருள் பெற்றார் யார்'? எனும் வினாக்களுக்குக் குறளினின்றும், குறளுரையாசிரியர்களினின்றும், சைவப் பெரியார்களினின்றும், பிற பல ஆசிரியர்களினின்றும் மேற்கோள் காட்டி ஆசிரியர் விளக்கந் தந்துள்ளார். பல கருத்துகளும் முடிவுகளும் ஏற்கப்பாலன.

'சொற்கள் ஒன்றுதலின் கருத்துகளும் ஒன்றே, கருத்துகள் ஒன்றுதலின் மூலமும் ஒன்றே,' என்பது விவாதத்திற்குரியது. மேலும் 'ஈன்றல்' போன்ற சொல் 'தந்தை ஈந்த மைந்தன்' என இறைமையின் தன்மையை விளக்கும் போதும், 'அன்பு ஈன் குழவி அருள்' என அருளின் தன்மையை விளக்கும் போதும் ஒரே பொருளுடைத்து என்பதும், 'ஈன்றல்' வினவில் தொடுக்கப்பட்டதால் அன்பு = தந்தை என்றும், அருள் = மைந்தன் என்றும், நட்பு = ஆற்றல் (ஆவியர்) என்றும் முடிப்பதும் வலிந்து பொருள் தருவதன்றோ எனும் ஐயப்பாடும் எழுகின்றது.

பல தமிழன்பர்கள்—குறளன்பரும் விவிலிய நண்பரும்— இந்நூலைக் கற்று, ஆய்ந்து, பயன்பெறுவர் என்பது எம் நம்பிக்கை.

சா. அமிர்தம்

Telegram : "CHRISARTS"
Telephone: Office : 446997
Res : (Rev. Suvi) : 446378

CHRISTIAN ARTS AND COMMUNICATIONS SERVICE,
3, Eldams Road, Teynampet, Madras-600018, South India.

*திருக்குறள் ஆய்வு மாநாடு ஒன்று 1972-ம் ஆண்டு மே திங்கள் 3, 4 தேதிகளில் சென்னையில் நடைபெற்றது. தேனும்பேட்டையில் இருக்கும் கிறிஸ்தவக் கலை-தொடர்பு நிலையத்திடலில் தமிழ் அறிஞர்கள் பலர் ஒன்று கூடி ஆய்வதற்கு 'வள்ளுவரின் கோட்பாடுகள் கிறிஸ்தவக் கோட்பாடுகள் தாமா?' என்னும் இப்பொருளைத் தெரிந் தெடுக்கக் காரணமாயிருந்தவை புலவர் தெய்வநாயகம் அவர்கள் எழுதிய ஆறு நூல்கள். அவை இவை :-*

ஐந்தவித்தான் யார்?

வான் எது?

நீத்தார் யார்?

எழு பிறப்பு?

சான்றோர் யார்?

திருவள்ளுவர் கிறித்தவரா?

*இந்நூல்களின் அடிப்படையில் ஓர் ஆய்வு மாநாட்டைக் கூட்டவேண்டும் என நான் எண்ணியதற்கு இரு காரணங்கள் இருந்தன. புலவர் தெய்வ நாயகம் தர்க்க ரீதியாகவும், இலக்கண ரீதியாகவும், வரலாற்று அடிப்படையில், பல பிற தமிழறிஞர்களின் ஆய்வுமுடிவு களைத் துணைக்கழைத்துக்* கொண்டு கிறித்தவமும் திருவள்ளுவரின் கோட்பாடுகளும் ஒன்றே என்று உறுதியுடன் கூறுகின்ற *ஆய்வு முடிவுகள் தமிழ்ப் பேரறிஞர்களால் எவ்விதம் ஏற்றுக் கொள்ளப்படும்*

என்பதை அறியவேண்டும் என்னும் அவா முதற்காரணம். இரண்டாவது காரணம் தன்னலமுடையது. உண்மை என்ன? என்பதை நானே அறிந்து கொள்ள வேண்டு மென்பது.

மாநாட்டின் சிறப்புத் தலைவராக மொழி நூல் முதறிஞர், பண்டித ஞா. தேவநேயப் பாவாணர், எம். ஏ, அவர்கள் வீற்றிருக்க, ஆய்வு மாநாட்டை நடத்திச் செல்லும் அரங்கத் தலைவராக நான் அமர்ந்து, அறிஞர் களின் ஆய்வு உரைகள் ஒவ்வொன்றையும் கேட்டேன்.

தமிழகத்தில் தனிச்சிறப்புடையவர்களும், ஆழ்ந்த அறிவு படைத்தவர்களும், தமிழுலகில் தமிழன்னையின் தவப்புதல்வர்களுமாகிய பேரறிஞர்களின் நடுவில் அமர்ந் திருந்து அவர்களின் தேன் நிகர் தமிழ் ஆய்வுக் கட்டுரை களைக் கேட்டுக் கொண்டிருந்த அந்த நாள்கள் என் வாழ்வில் ஒப்பற்ற நாள்கள்.

எனினும், மாநாட்டு முடிவில் நான் குழப்பமுடைய வனுகவே இருந்தேன்; ஏனெனில் புலவர் தெய்வநாயகம் திருக்குறள் ஆராய்ச்சியின் பயனாக எழுப்பியுள்ள வினாக் களை, அவ்வினாக்களுக்கு அவரே உணர்த்தும் விடைகளைத் தர்க்க ரீதியாக, வரலாற்றின் அடிப்படையைக் கொண்டு இலக்கண இலக்கிய மேற் கோள்களுடன் ஒருவராவது ஆணித்தரமாக மறுத்துக் கூறவில்லை; மாறுகத் தெய்வ நாயகத்தின் புலமையைப் பாராட்டினார்கள்; அவர் காண்பிக்கும் முடிவுகளுக்கு அவர் தர்க்க ரீதியாக அறிஞர் களின் பல மேற்கோள்களுடன் நடத்திச் செல்லும் முறையைப் பாராட்டினார்கள். ஆனால், முடிவுகள் ஏற்றுக் கொள்ளப்பட முடியாதவை 'என்றார் சிலர்; வேறு சிலர், ஏற்றுக்கொள்ளாமலிருக்கக் காரணங்கள் இல்லை என்றும் கூறினர்.

முடிவுகள் ஏற்றுக் கொள்ளப்பட முடியாதவை என்று கூறத் தகுந்த காரணங்கள் சொல்லப்பட்டிருக்கு மாயின்குழப்பம் நீங்கியிருக்கும்-

திருவள்ளுவர் 'புலால் மறுத்தலைக் குறித்துச் சொல்லும் கோட்பாடுகளுக்கு தெய்வநாயகம் என்ன சொல்வார் என்னும் வினா என் உள்ளத்தில் எழுந்தது. இப்பொழுது உங்கள் கையிலிருக்கும் நூல் என்மனத்தில் இருந்த பல வினாக்களுக்கு விடைதருகிறது. ஆசிரியரின் பிற நூல்களுடன் சேர்த்து இதையும் வாசிக்கும் பொழுது இவ்வாராய்ச்சி நூலின் தனித் தன்மையை உணர இயலும்.

பிற தமிழறிஞர்களின் ஆய்வு முடிவுகளைத் தன் ஆய்வுக்குத் துணைகொண்டு அழைத்து ஆணித்தரமாக எழுதப்பட்ட இவ்வாசிரியரின் பிற நூல்களுக்கு எவ்விதத்திலும் தரத்தில் குறையாமல் இந் நூலும் எழுதப்பட்டுள்ளது என்பதில் ஐயமில்லை.

புலால் மறுத்தல் கோட்பாட்டுக்குப் புலவர் தெய்வநாயகம் கூறும் உரை புதுமையானது; ஆனால், பொருத்தமற்றது அன்று. வள்ளுவர் ஆராய்ச்சி வளர வேண்டும். உண்மை நெறியைத் தமிழகம் உணர வேண்டும். அந்நெறி உலக நெறியாக மலர வேண்டும். தமிழனின் திருமறையாம் திருக்குறள் உலகமெங்கும் தன் புகழ் மணம் வீசி நிற்கவேண்டும். அதற்குப் பாரபட்சமற்ற தூய்மையான ஆராய்ச்சி மலர வழி ஏற்படவேண்டும். புலவர் தெய்வநாயகத்தைப் போன்று பிறபல ஆராய்ச்சியாளர்கள் முன்வர வேண்டும். அவர்கள் முயற்சி வெல்ல வேண்டும். இந்த நல்லெண்ணத்துடன் இவ்வுரையை எழுதுகிறேன். புலவர் தெய்வநாயகத்தின் பணி சிறக்க அவர் நம்பி நிற்கும் பொறி வாயில் ஐந்தவித்தான் அருளும் துணையும் என்றும் நிற்கட்டும்.

சா. சுவிசேஷ முத்து,

B. D., M. Th.,

# பொருளடக்கம்



# 1. செல்வம்

வள்ளுவர் செல்வத்தை இரு வகையாகப் பிரிக்கின்ருர்.

1. பொருட் செல்வம்
2. அருட் செல்வம்

அவர் இந்த இரண்டு செல்வங்களையும் ஒப்பிடுகிருர். எப்படி ?

“ அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்; பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள.”

என்பது குறள். ‘எல்லாச் செல்வங்களுள்ளும் சிறந்தது அருட்செல்வமே. அஃதில்லாத பொருட் செல்வமோ அற்பமானவர்களிடமும் உண்டு’ என்பது இக்குறளுக்குப்பொருள்.

பொருட்செல்வம், இழிந்தவர்களிடமும் உண்டு என்பதால் அருட்செல்வம் உயர்ந்தவர்களிடம் மட்டுமே உண்டு என்ருகிறது.

பொருட்செல்வம், பொதுவாக மக்கள் யாவருக்கும் இவ்வுலக வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒன்றே. இவ்வுலக வாழ்வுடன் பொருட்செல்வம் முடிந்து விடுகிறது. ஆனல், அருட் செல்வமோ இவ்வுலக வாழ்க்கைக்குப் பின்னரும் நின்று பயன் தருவது. அது மட்டுமல்லாது மறு உலக வாழ்க்கைக்கு அடிப்படைத் தேவையானது அருள் ஒன்றே.

“ அருளிலார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளிலார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு.”

என்பது குறள். ஆகவே, இவ்வுலகச் செலாவணி பொருளே

அவ்வுலகச் செலாவணி அருள்.

பொருள் நிரம்பியவர் இவ்வுலகில் இன்பமடைவர்.

அருள் நிரம்பியவர் அவ்வுலகிலும் இன்பமடைவர்.

எனவே, மறு உலகப் பற்றுக்கொண்டு இவ்வுலக இன்பங்களைத் துறக்கும் துறவிகளுக்கு அடிப்படை யாக வேண்டுவது அருள் என்பதாகிறது. ஆகை யால் வள்ளுவர் துறவறவியலின் அதிகாரமாக அருள் உடைமையைக் கூறுகிறார். அருள் இல்லாதவர்கள் துறவியாகத் திகழ முடியாது என்பது வள்ளுவர் கொள்கை என்றாகிறது.

அடுத்து, வள்ளுவர் அருளை ஆள வேண்டும் எனத் துறவிகளுக்குக் கூறுகிறார்; ஏன் ஆள வேண்டும் என்பதற்கும் காரணம் கூறுகிறார். அதுஇது;

"நல்லாற்றால் நாடி அருளாள்க; பல்லாற்றால்
தேரினும் அஃதே துணை."

நல் நெறிகளில் ஆராய்ந்து அருளை ஆள வேண்டும். பல நெறிகளில் ஆராய்ந்தாலும் அருளைத் தவிர வேறு துணை இல்லை. ஆகவே, உலகில் சிறந்த நெறி அருளை ஆளும் நெறியே.

அருளை ஆளுதல் என்றால் என்ன?

இதற்கு விளக்கம் காண அருளுடன் இணைத்துக் கூறப்படும் பொருளை ஆளுதல் என்றால் என்ன?

என்பதைப் பார்ப்போம். அருளும் பொருளும் இரு வேறு தன்மையுடையவை. ஆளுதல் என்பது பொது.

பொருளை ஆளுதல் என்றால் என்ன? கிடைத்த பொருளைத் தகுந்த வழியில் பயன்படுத்துதல் என்பது. தகுந்த வழியில் காத்தல் - தகுந்த வழியில் பெருக்குதல். இதை ஆங்கிலத்தில் கூறினால் இப்படிப் பொருளாகும். ஆளுகிறவர் — Manager. ஆளுகிறவர் உண்டாக்கியவரிலிருந்து வேறானவர் (Proprietor). படைத்தவர் வேறு; ஆளுகிறவர் வேறு. இதையே அருளுக்கும் இணைத்தால் அருளை உண்டாக்கியவர் வேறு; அருளை ஆளுகிறவர் வேறு. அருளை ஆளுகிறவராக மட்டுமே துறவி சிறப்பிக்கப்படுகிறார். ஆகவே, அருளை உண்டாக்கியவர் துறவியர் அல்லர் என்பதும் உட்பொருளாக விளக்கப்படுகிறது.

அருளை உடையவர் (படைத்தவர்) ஒருவர்.
அருளை ஆளுகிறவர் துறவியர்.

அருளைப் பெற்றுக்கொள்கிறவர்கள் மக்கள். ஆக, மூவகையினரைப் பார்க்கிறோம். அருளை ஆள்கிறவரே துறவியர் என்பது வள்ளுவரால் விளக்கப்படுகிறது. எங்ஙனம்? அருளுடைமையை அடுத்து வைக்கப்பட்டுள்ள புலால் மறுத்தலில்,

“ தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறிது ஊன்உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்? ”

எனக் கேள்வி கேட்பதுடன் “பொருள் ஆட்சி போற்றாதார்க்கில்லை; அருள் ஆட்சி ஆங்கில்லை ஊன்தின்பவர்க்கு”

எனப் பொருளாட்சியுடன் இணைத்து அருளாட்சியும் கூறப்பட்டுள்ளமையாலேயாகும் என்று கூறுதலாலே அறியலாம்.

ஆகவே, "துறவி ஊன் உண்ணுகிறவராய் இருந்தால் அவருக்கு அருளாட்சி நிலைக்கவழியில்லை" எனக் கூறுகிறார் வான்புகழ் வள்ளுவர். எனவே, அருள் வேறு; அருளாட்சி வேறு என்றறிக. பொருள் ஓர் உடைமை. பொருளாட்சி ஒரு பொறுப்பு. அவ்வாறே அருள் ஓர் உடைமை. அருளாட்சி ஒரு பொறுப்பு. ஊன் தின்பவர்களிடம் அருளாட்சி நிலையாது என்பது வள்ளுவர் கூற்று.

அருள் ஓர் உடைமை. அதனை ஆளுகிறவர்கள் துறவிகள். அருளாட்சியுடைய துறவிகள் ஊன் உண்டால் அவர்களுக்கு அவ்வருளாட்சி இல்லை என்பது வள்ளுவர் விளக்கம்.

ஊனையே முக்கிய உணவாகக் கொண்ட ரோம் நாட்டிலிருந்து நம் நாட்டுக்குக் கிறித்துவ சமயத் தொண்டாற்ற வந்த தத்துவப் போதக சுவாமிகள் (Robert de Nobili) என்பவர் துறவியாகிய குருக்கள் ஊன் உண்ணக் கூடாது எனத் தெளிவாய்க் காரண காரியங்களுடன் விளக்கிக் கூறியுள்ளார். (தூஷண திக்காரப் பாடம் 32.5. ஊழியம் செய்யும் குரு உலக சுகத்தைத் தேடக்கூடாது முதல் 32. 10. VI உண்பது, குடிப்பது பற்றிக் கவனிக்க வேண்டியவை முடிய.)

"காவை விடாது குயிலெந்த நாளும் கடிகமழும்
பூவை விடாது மதுகரம் தீயர் புடைக்கினுமே
ஆவை விடாதிளம் கன்றடியேனுன் அரிய திருச்
சேவை விடாமலிருக்க வாமருள் சேசையனே"

என யேசு பெருமானிடம் வரம் வேண்டும் மாயூரம் வேதநாயகம் பிள்ளையவர்களும் தாம் எழுதிய நீதி நூலில் ஊனுண்ணல் தவறு என ஓர் அதிகாரமே எழுதி விளக்கிக் காட்டுகிறார். ஆகவே, அருளாட்சியை மேற்கொண்ட துறவிகள் ஊன் உண்ணுதல் இயைந்ததன்று என்பது நன்கு விளங்கும். ஊன் உணவு, புலால் மறுத்தல் இவற்றின் வரலாற்றை அடுத்துக் காண்போம்.

# 2. புலால் மறுத்தலின் வரலாறு

இன்று நாம் உண்ணும் உணவு இருவகையாகப் பகுக்கப்படுகின்றது.

(1) சைவ உணவு, (2) அசைவ உணவு அல்லது புலால் உணவு.

சைவம் என்றால் என்ன?

இக்கேள்விக்கு சைவ சமயத்தைப் பற்றி ஆராய்ந்து "சைவ சமயம்" என்ற பெயரால் நூல் வெளியிட்டுள்ள திரு. மு. அருணாசலம் அவர்கள் கொடுக்கும் விளக்கத்தைப் பார்ப்போம்.

"சைவம் என்ற சொல் மிகச் சிறந்த கருத்தைத் தன்னுள் அடக்கியுள்ளது. தமிழ் நாட்டில் உள்ள எல்லா மக்களுக்கும்—நகரம், நாட்டுப்புறம், படித்தவர், படிக்காதவர், மேல்வகுப்பு, கீழ்வகுப்பு, ஏழை, பணக்காரன், ஆடவர், பெண்டிர் என்ற வேற்றுமை எதுவுமின்றி நன்கு தெரிந்த விரிந்த கருத்துடைய ஒரு சொல். சைவம் என்பது புலால் நீக்கிய வாழ்க்கை. அசைவம் என்பது புலால் உண்ணும் வாழ்க்கை. இதுவே பாமர மக்கள் நாவில் வழங்கும் சொல்லும் பொருளும் சமயத்தினுள் புகாமலே இப்படிப்பட்ட கருத்தை நாம்காணுகிறோம். சைவன் என்றால் பரம்பரையாக மாமிசம் உண்ணாதவன்." —சைவசமயம் பக்கம் 7.

மேலே காணும் கூற்றிலிருந்து நமக்குக் கிடைக்கும் விளக்கம்.

புலால் மறுத்த உணவு சைவம்.

பரம்பரையாக புலால் உண்ணுதவன் சைவன்.

"புலால் மறுத்த உணவால் மட்டுமே சைவ மக்கள் இப்பெயர் பெறுகின்றார்களா? அல்லது இப் பெயர் பெறுதற்கு சமய அடிப்படை உண்டா?" என்னும் கேள்விகளுக்கும் விடை கொடுக்கப்படு கிறது. அவர் கூறுகிறார்.

> "புலால் மறுத்தவர் சைவர் என்ற ஒரு கருத்தைக் குறிப்பிட்டோம். இது உலக வழக்கில் இருந்த போதிலும் கூடச் சிவனையே பரம்பொருளாகக் கொண்டவர் சைவர் என்ற கருத்தை இங்கு வலியுறுத்திச் சொல்ல வேண்டும்."
>
> -சைவ சமயம் பக். 16.

ஆகவே, சிவனையே பரம்பொருளாகக் கொண்ட வர்களும், புலால் மறுத்த உணவைப் பரம்பரையாக உண்டு வருகிறவர்களுமே சைவர் என்று பெயர் பெறுவர் என்னும் உண்மை நமக்குப் புலனாகிறது.

ஆனால், இன்று நடைமுறையில் இது மாறு பட்டு விளங்குவதைக் கூர்ந்து நோக்குவோர் உணர்ந்து கொள்ள முடியும். சைவப் பெருமக்கள் உலகிலேயே தமிழ்நாட்டில்தான் பெரும் பகுதியாக வாழ்கின்றனர். சிவன் கோவில்களும் பெருமள வில் இருப்பது தமிழ்நாட்டில் மட்டுமேயாகும். நாம் பார்த்தபடி சைவர் என்றால் புலால் உண்ணுத வர்களாய் இருத்தல் வேண்டும். ஆனால், தமிழ் நாட்டிலுள்ள சைவப் பெருமக்களுள் புலாலுணவு உண்ணும் சைவப் பெருமக்களே அதிகம். அதாவது சமயத்தால் சைவர்களுள் உணவால் அசைவர்களே

மிகப் பெரும்பான்மையினர். உணவாலும், சமயத்தாலும் சைவர்கள் மிகச் சிறுபான்மையினராகவே உள்ளனர். இச்சிறுபான்மையினரும் ஒரு தனித்த கூட்டமாக, மற்றச் சைவ சமயத்தவரிடமிருந்து பிரிந்து தனிச் சாதியாகவே விளங்குகின்றனர்.

"இன்றைய உலக வழக்கில் சைவர் என்ற சொல் ஒரு சாதியினரைக் குறிக்க வழங்குகிறது. அவராவர் வேளாளர் என்ற பிரிவில் பரம்பரையாகப் புலால் உணவு உண்ணாதவர்கள். தமிழ்நாடு முழுமையும் இவ்வழக்கு உண்டு"
-சைவசமயம் பக்கம்-16

ஆகவே, புலால் மறுத்த சைவர் ஒரு தனிக் கூட்டமான சாதியார். சிவனை வணங்குவோர் ஒரு சமயத்தார். அச்சாதியாருடைய உணவு முறையிலும், மிகுந்த வேறுபாடு இருக்கிறது. இது எப்படி முடியும்? சைவம் என்பது சாதியா அல்லது சமயமா?

சைவம் என்பது உணவு முறையா? அல்லது வணக்க முறையா?

வணக்க முறை என்றால் உணவு முறை சிறப்பிழக்கிறது.

உணவு முறை என்றால் வணக்க முறை சிறப்பிழக்கிறது எவ்வாறு?

வணக்க முறையே சைவம் என்றால் சிவனை வணங்குபவரில் பெரும்பான்மையினர் புலால் உணவு உண்பவரே. ஆகவே, புலால் மறுத்தல் சைவம் அன்று என முடியும்.

உணவு முறையே சைவம் என்றால் சைவர்களாயிருப்போரில் பெரும்பகுதியினர் அசைவ உணவே உண்போராகையால் அவரெல்லாம் சைவ சமயத்தினர் அல்லர் என முடியும்.

ஆகவே, சைவம் என்பது உணவு முறையா அல்லது வணக்க முறையா என்பதை நாம் ஆராய்ந் தறிதல் வேண்டும். சைவ உணவாகக் கூறப்படும் புலால் மறுத்தலுக்கும் சைவக் கடவுளாகக் கூறப் படும் சிவபெருமானுக்கும் உள்ள தொடர்பை நாம் கண்டால் இச்சிக்கலிலிருந்து எளிதில் விடுபடலாம். சிவபெருமானுக்கும் புலால் மறுத்தலுக்கும் தொடர்பு உண்டா? இக்கேள்விக்கு விடைகாணும் முன்னர் சைவ சமயத்தின் வரலாற்றை அறிவது நலமாகும்.

சங்க இலக்கியங்களை நாம் நோக்குங்கால் அக் காலத் தமிழர்கள் எந்தச் சமயப் பாகுபாடுமின்றிச் சமயங்கடந்தவர்களாய் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற உயர்ந்த பண்பாட்டில் வாழ்ந்தவர் களாவர். தெளிவாகச் சொன்னல் தமிழன் சமயம் கடந்தவனே. சமயங்கள் யாவும், தமிழகத்திற்கு வந்து இறங்கிய இறக்குமதிச் சரக்குகளேயன்றித் தமிழனல் உருவாக்கப்பட்டவை அல்ல.

இவ்வாறு வந்து புகுந்த சமயங்களுள் காலத்தால் முன்பு வந்தது வைதிகச் சமயம் எனப்படும் ஆரியச் சமயம் ஆகும். அவ் வைதிகச் சமயம் பிற்காலத்தில் இரண்டாகப் பிரிந்தது. அவ்வாறு பிரிந்தவையே,

1. சிவனை வழிபடு கடவுளாகக் கொண்ட சைவமும்

2. விஷ்ணுவை வழிபடு கடவுளாகக் கொண்ட வைணவமும் ஆகிய இரண்டும் ஆகும். இதைச் சங்க நூல்களை நன்கு ஆராய்ந்து அவற்றிற்கு உரை வரைந்த சைவப் பெரியாரான பெருமழைப் புலவர் திரு. பொ. வே. சோமசுந்தரனர் அவர்களே தெளி வாகக் கூறுகிருர்கள்.

"வைதிகசமயம் முதலாகக் கிறிஸ்துவசமயம் ஈறுக வுள்ள எல்லாச் சமயங்களுமே பிறநாட்டினின்று இங்நாட்டில் வந்து புகுந்த சமயங்களே என்பது வரலாற்றை அறிந்ததோர் உண்மையாகும்.

"வந்தேறிகளாகிய சமயங்களுள் மிகப் பழைய காலத்திலேயே பிற நாட்டினின்றும் நம் தமிழகத்துக்கு முந்து வந்து புகுந்த சமயம் வைதுக சமயமேயாகும் நமது சைவ சமயமும் வைணவ சமயமும் வைதிக சமயத்தின் கிளைகளே"

-(நீலகேசி ஆராய்ச்சி முன்னுரை பக்கம் 13-14)

வைதிகசமயம் சைவமெனவும், வைணவமெனவும் இரண்டாகப் பிரிந்தது சங்க காலத்திற்குப் பிறகே யாகும். சங்க இலக்கியங்களில் சைவம் என்னும் பெயரோ சிவன் என்னும் பெயரோ கிடையாது என்பது சைவப் பெரியாரான மறைமலையடிகளாரின் ஆய்வாகும்.

"சைவம், வைணவம்" என்னும் இருவகைச் சமயப் பகுப்பு அக்காலத்தில் இத்தமிழ் நாட்டின்கண் இருந்ததே யில்லை. கி.பி. இரண்டாம் நூற்றுண்டிற்கு முற்பட்ட பழைய செந்தமிழ்ப்பாட்டுகளில் எங்குஞ் சைவம், வைணவம் என்னும் சொற்கள் காணப்படா."

-மாணிக்கவாசகர் காலம்-பக்கம்-275

"இனி இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டு கட்கு முற்பட்ட பழைய பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய நூல்களிலாதல், அவற்றிற்கு முற்பட்ட தொல்காப்பிய நூல்களிலாதல் சிவன் என்னும் பெயர்ச்சொல் காணப்படாமையின், அது தென்னுட்டிலிருந்த பண்டைச் சான்றோர் வழங்கிய சொல்லன்றென்பது அங்கையங்கனி போல நன்கு விளங்கா நிற்கும்." —தமிழர் மதம்-பக்-136

ஆகவே, சைவ சமயப் பெரியார்களான பெருமழைப் புலவர் பொ. வெ. சோமசுந்தரனார், மறைமலையடிகள் ஆகிய இருவருடைய ஆய்வுரைகளிலிருந்து சங்க காலத்தில் 'சிவன்' 'சைவம்' 'வைணவம்' ஆகிய பெயர்கள் வழங்கப்படவில்லை என்பதும், இவை தமிழகத்திற்கு முந்தி வந்து புகுந்த வைதிக சமயத்தின் பிற்காலக் கிளைகளே என்பதும் நன்கு புலனாகின்றன.

இனி, புலால் மறுத்தலுக்கும், சைவ, வைணவ அடிமரமான ஆரியர்களின் வைதிக சமயத்திற்கும் தொடர்புண்டா என்று நோக்குவோம். தொடர்பில்லை என்பது ஆராய்ச்சி அறிஞரான மயிலை சீனி வேங்கடசாமி அவர்களின் கருத்தாகும். அவர் கூறுவது இது:

"ஆரியப்பார்ப்பனர் ரிஷிகளுக்கு விருந்து செய்யும் போதும் சிரார்த்தம் செய்யும்போதும், கன்றுக்குட்டி, ஆடு, மான், முயல், உடும்பு முதலிய பிராணிகளின் மாமிசத்தைச் சமைத்து உண்டனர். எத்தனை வகை மாமிச உணவைச் சமைக்கிறார்களோ அத்தனை உயர்வாக மதிக்கப்பட்டது அவர்களுடைய விருந்து. இதற்கு அவர்களுடைய வேதம், இதிகாசம் முதலிய நூல்களே சான்றாகும்.

—சமணமும் தமிழும்-பக்கம்-77

வைதிகத்திலிருந்து பிற்காலத்தில் சைவமெனவும் வைணவம் எனவும் பிரிவுகள் ஏற்பட்ட பின்னர்ச் சைவ சமயக் கடவுளான சிவனுக்கும், புலால் மறுத்தலுக்கும் தொடர்பு உண்டா என்பதைச் சைவ சமயப் பெரியாரான மறை மலையடிகள் கீழ்வருமாறு கூறுகிறார்கள்:

"தில்லைவாழ் அந்தணர்கள் அஞ்ஞான்று வேட்ட வேள்விகள் ஆரியரைத் திருத்துதற் பொருட்டுச் சிவபிரானை

நோக்கிச் செய்யப்பட்ட கருத்துணர்ந்தே திருஞானசம்பந்தப் பெருமான் " பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட்டுஎரியோம்புஞ், சிறப்பர் வாழ் தில்லைச் சிற்றம்பலம் என்று அவர்தம்மை உயர்த்திப் பாடினர். பல்லாயிர உயிர்களைக் காக்கும் பொருட்டு ஒரு சில உயிர்களைக் கொல்லுதல் குற்றம் ஆகாமை அரசியல் முறைக்கும் ஒத்ததேயாதலின் ஆரியர் வேட்ட பல்லாயிரக்கணக்கான உயிர்க் கொலையை நிறுத்துதற் கருவியாய்த் தில்லை வாழந்தணர் எல்லாம் வல்ல இறைவனை நோக்கிச் சில்லுயிர் வேட்டுச் செய்த வேள்விகளும் குற்றமாகா ஆயின.

—பொருந்தும் உணவும், பொருந்தா உணவும் -பக்- 110

இதுவரை நாம் கண்டவைகளிலிருந்து வைதிக சமயத்திற்கோ சங்க காலத்திற்குப் பின்னர் அவ்வைதிக சமயத்திலிருந்து பிரிந்து தனித்து விளங்கிய சைவ சமயத்திற்கோ புலால் மறுத்தலுடன் தொடர்பில்லை என்பதும், சைவம் உயிர்களைக் கொன்று செய்யப்பட்ட வேள்வியையுடைய சமயமே என்பதும் நன்கு விளங்குகின்றன.

# 3. சைவப் பெருமக்களின் வரலாறு

அப்படியானல் வேள்வியை அடிப்படையாகக் கொண்ட சைவ சமயத்தில் புலால் மறுத்த உணவை பரம்பரையாக உடைய தனிக் கூட்டமாகிய மக்கள் வந்த விதம் என்ன? இவர்கள் மற்றச் சைவர்களுடன் இணையாது தனிக் கூட்டமாகவே வாழ்ந்து ஒரு சாதி என்ற நிலையைப் பேணிக்கொண்டது எவ்வாறு? ஆழ்ந்து நோக்கினல் சிறு பகுதியினராகிய இம்மக்கள் இன்று சைவ சமயத்தின் முன்னணி வீரர்களாய் விளங்குவதுடன், வேள்வி செய்யும் அடிப்படையைக் கொண்ட சைவ சமயத்தை, அதன் அடிப்படையில் இருந்தே மாற்றி அமைத்திருப்பதுடன் பெரும் பகுதி யாக விளங்கும் மற்றப் புலால் உண்ணும் சைவ சமய மக்கள் மீது புலால் மறுத்தல் கொள்கையை ஏற்றிப் புலால் மறுத்தல் கொள்கையே உயர்ந்தது என்னும் அளவுக்கு இச்சமயத்தையே மாற்றி அமைப்பதற்கு ஆதரவாகப் புலால்மறுத்தல் கொள்கையில் இவ்வ ளவு வேகம் இவர்களுக்கு எங்கிருந்து வந்தது? இவர் கள் பின்பற்றும் சைவ சமயம் இவர்களுக்கு இந்த வேகத்தைக் கொடுப்பதற்கு எவ்விதத்திலும் வழி இல்லை. அப்படியானல் வேகத்தின் இருப்பிடம் எங்கே?

சங்க காலத்திற்குப் பின்னர் வைதிக சமயத்தி லிருந்து பிரிந்து வளர்ந்த சைவ சமயத்தை நோக்கு வோம். நமக்கு கிடைத்துள்ள ஆதாரங்களின்படி

சைவ சமயம் வளர்ச்சி பெற்றது கி. பி. ஆரும் நூற்றுண்டுக்குப் பின்னரேயாகும்.

பொது மக்கள் சமயமாயிருந்த சைவத்தை அரச சமயமாக்கிய பெருமை திருநாவுக்கரசரையே சாரும். தமிழகத்தின் பெரும்பகுதியை ஆண்ட பல்லவன் திருநாவுக்கரசரால் சமணத்திலிருந்து சைவத்திற்கு மாற்றப்பட்ட பின்னரே, பாண்டிய மன்னனும் திரு ஞான சம்பந்தரால் சமணத்திலிருந்து சைவத்திற்கு மாற்றப்பட்டான். ஆகவே, திருநாவுக்கரசருக்குப் பின்னரே தமிழகத்தில் சமணம் வீழ்ந்து சைவம் மேலோங்கியது.

திருநாவுக்கரசர் சமணத்திலிருந்து சைவரானவரே. சமணர்கள் தீவிரமாகக் கடைப்பிடித்த கொல்லாமை, புலால் மறுத்தல் கொள்கைகளை அவை இல்லாத சைவத்தில் இவர் கலந்தார்.

" No greater tribute could be paid to the service that Jainism has rendered to religion and morality, by emphasising AHIMSA than that of Appar the Saiva Saint, who apostatized from the Jaina faith but still proclaimed DAYA MULA DHARMAM(Dharma based on daya or daya is the basic dharma). K. R.-Venkatarama Ayyar - South Indian Jainism - Transactions of the Archaeological Society of South India 1957 – '58

சமணர்கள் வைதிகசமயமான இந்து மதத்திற்கு மதமாற்றம் பெற்ற போதிலும் தங்கள் சமண சமய உணவு முறையான புலால் மறுத்த உணவை விட்டு விடவில்லை. புலால் மறுத்தலையும், கொல்லாமையையும் தங்களுடன் எடுத்துச் சென்றனர். சமணர்கள்

எந்தெந்தச் சமயங்களுக்கு மதமாற்றமடைந்தார் களோ அந்தந்தச் சமயங்களுக்கெல்லாம் புலால் மறுத்தல், கொல்லாமை ஆகிய கொள்கைகளும் கொண்டு செல்லப்பட்டன. சமண சமயத்தின் இக் கொள்கை சமணர்களின் வரவால் மற்றச் சமயங் களிலும் நுழைந்தது.

"சமண சமயத்தவருடைய ஊன் உண்ணாமைக் கொள்கை நாடெங்கும் பரவிச் செல்வாக்கடைந்தபோது இந்து மதத்தவரும் இக்கொள்கையைத் தமது கொள்கை யாக ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. மற்றும் பிற் காலத்திலே இந்துமதம் செல்வாக்கடைந்து சமண சமயம் பின்னடைந்த காலத்தில், சமணர்கள் ஏராளமாக இந்து சமயத்தில் சேர்ந்து மதம் மாறியபோது, தமது ஊனுண் ணாமைக் கொள்கையை விடாமல் இந்து மதத்தில் புகுத்தி விட்டனர். இவ்வாறு இரண்டு விதத்தில் சமணரின் இக் கொள்கை இந்து மதத்தில் சேர்ந்து விட்டது."

-மயிலை சீனி வேங்கடசாமி-சமணமும் தமிழும் பக்-69.

ஆகவே, சங்க காலத்திற்குப் பின்னர் வைதிக சமயத் திலிருந்து பிரிந்து வளர்ந்த சைவ சமயம், தமிழகத்தி லிருந்த சமணர்களின் செல்வாக்காலும் வரவாலும் தனது அடிப்படைக் கொள்கையான கொலை வேள்விக் கொள்கையிலிருந்து முற்றிலும் வேறு பாடடைந்தது.

சைவ சமயத்தில் இல்லாத உணவு முறைக்குச் சைவ உணவு என்ற பெயர் எவ்வாறு ஏற்பட்டது என நோக்கினல், ஆருகதராகிய சமணர்கள், சைவர் களாக மதம் மாறிய போது, 'ஆருகத உணவு'

என்றிருந்த தங்கள் உணவு முறையின் பெயரையும் சைவ உணவு என மாற்றி விட்டனர் என்பது தெரிகிறது.

"ஊன் உணவு அல்லாத 'காய்கறி' உணவுக்கு இப்போது சைவஉணவு என்று பெயர் கூறப்படுகிறது. சமண சமயம் செல்வாக்குற்றிருந்த பண்டைக் காலத்திலே 'மரக்கறி' உணவுக்கு ஆருகத உணவு என்று பெயர் வழங்கியதாகத் தெரிகிறது. இலங்கையில் உள்ள தமிழர்கள் 'காய்கறி' உணவை இப்போதும் ஆரத உணவு என்று வழங்கி வருகின்றனராம். ஸ்ரீபுராணம்; நூன்முகம் பக்கம்-xxxii) ஆரத உணவு என்பது ஆருகத உணவு என்பதன் திரிபு."

-மயிலைசீனி வேங்கடசாமி-சமணமும் தமிழும்-பக் 79

ஆகவே,

புலால் மறுத்த உணவு = ஆருகத உணவு
பரம்பரையாகப் புலாலுண்ணுதவன்—ஆருகதன் அல்லது சமணன்

என்றிருந்த பழைய பெயர்கள் ஆருகதர் சைவராக மதம் மாற்றம் பெற்றமையால்,

புலால் மறுத்த உணவு —சைவம் எனவும்
பரம்பரையாகப் புலாலுண்ணுதவன்–சைவன் எனவும்

மாறி அமைந்துள்ளன என்பதில் எவ்வித ஐயத்திற்கும் இடம் இல்லை.

ஆகவே, இன்று நாம் காணும் சைவ சமயத்தில் பரம்பரையாகப் புலாலுண்ணுத தனிச் சாதியாராகச் சைவர் என்னும் பெயரில் வழங்கப்படும் பெருமக்கள், கி. பி. ஆறும் நூற்றுண்டுக்குப் பின்னர் சமணத்திலிருந்து சைவர்களாக மதமாற்றம் பெற்றவர்களே

என்பதும், இவர்கள் வரவால் வேள்விக் கொள்கையையே அடிப்படையாகக் கொண்டு விளங்கிய சைவம் தன் அடிப்படைக் கொள்கையிலிருந்து மாறி நாம் இப்போது காணும் நிலைக்கு வந்துள்ளது என்பதும் தெளிவு.

"இப்போது சைவராக உள்ளவர்களில் பெரும்பகுதியோர் பண்டைக்காலத்தில் சமணராக இருந்தவர்களே என்பதற்குப்போதிய சான்றுகள் பல உள"

-மயிலை சீனி வேங்கடசாமி சமணமும் தமிழும் பக் 76

"மாணிக்கவாசகர் அப்பர் சம்பந்தர் சுந்தரர் முதலான நம் சமயாசிரியர்கள் பௌத்த சமண மதங்களிலிருந்து சைவ சமயம் தழுவ விரும்பினரை அங்ஙனம் சைவ சமயத்திற் சேர்த்து அதனைப் பரவச் செய்திருக்கிறார்கள்."

மறைமலையடிகள் சைவசமயத்தின் நெருக்கடியான நிலையும் சீர்த்திருத்தக் குறிப்புகளும் பக்கம் 42

சைவர்களாக மாறிய சமணர்களின் செல்வாக்கு நாளடைவில் சைவத்தில் ஓங்கியமையால், சைவமாகிய கிளையின் பழைய அடிமரமாகிய ஆரியர்களின் செல்வாக்குக் குறைந்தது. அப்போது புலாலுண்ணுதல் புதியவர்களுக்கும், புலாலுண்டுவந்த பழைய சைவர்களாகிய ஆரியர்களுக்கும் சைவ சமயத்தின் தலைமை இடத்திற்கு ஆதிக்கப் போட்டி ஏற்பட்டது. புலால் மறுத்தல் கொள்கையே நாடெங்கும் சிறப்பெனப் போற்றப்பட்டமையால், புலால் மறுத்தவர்களுக்கே தலைமைப் பதவி கிடைக்கும் என்ற நிலை ஏற்பட்டது. இந்நிலையில் தலைமைப் பதவியைக் காத்துக் கொள்ளும் முயற்சியில் பரம்பரையாகப் புலாலுணவையுண்டும் வேள்வி வேட்டும்

வந்த ஆரியர்கள் தங்கள் உணவு முறையை மாற்ற வேண்டிய நிலை வந்தது. எப்போதும் தலைமைப் பதவியில் கண்ணும் கருத்துமாய் இருந்து வந்த ஆரியர், அதைக் காத்துக்கொள்ளும் முயற்சியில் தங்கள் உணவு முறையையே மாற்றித் தங்கள் ஆதிக்கத்தைக் காத்துக் கொண்டனர். ஆகவேதான் ஆரியர்களின், அடிமாமாகிய வைதிகத்தின் கிளையாக விளங்கும் சைவம், ஆரியக் கொள்கையாகிய உயிர்க் கொலை வேள்வியிலிருந்து முற்றிலும் மாறி அமைந்த போதிலுங்கூட, ஆரியர்களின் செல்வாக்கிலிருந்து நீங்கி விடவில்லை. புதிதாகச் சைவத்திற்கு வந்த சமணர்கள் சைவத்தையே தங்கள் கொள்கையால் மாற்றி அமைத்தாலுங்கூடத் தலைமை இடத்தைப் பிடிக்க முடியவில்லை. இன்றும் இறைவனுக்குப் பூசை செய்பவர் பிராமணரே. இச்சைவர்கள் வெளியிலிருந்து கடவுளை வணங்கிச் செல்லுகிறவர்களாகவே வைக்கப்பட்டுள்ளனர். ஆனாலும், வாய்ப்பு ஏற்படும் பொழுதெல்லாம் பிராமணர்களை எதிர்ப்பதில் மட்டும் இவர்கள் பின்வாங்குவதில்லை. பிராமணர்களும் விழிப்புடன் இவர்களைச் சூத்திரர் எனக் கூறிச்சற்றுத் தூரத்தில் ஒதுக்கியே வைத்துக்கொள்ளுகின்றனர்.

ஆகவே, புலால் மறுத்தல் சைவமா? எனக் கேள்வி எழுப்பப் படுமானல், வரலாறு அறிந்தவர்கள் 'இல்லை' என்று பதில் கொடுக்க முடியுமே யன்றி 'ஆம்' எனக் கூற இயலாது.

சமணர்களின் செல்வாக்காலும் சமணர்களின் மதமாற்றத்தாலும், தமிழகத்தில் பரவிய மற்றச்சமயங்

களிலும் புலால் மறுத்தல் கொள்கை நுழைந்தது. ஆகவே, புலால் மறுத்தல் கொள்கை எல்லாச் சமயங்களுக்கும் உரிய பொதுக்கொள்கையாக மாறியதேயன்றிக் குறிப்பிட்ட ஒரு சமயத்தின் சிறப்புக் கொள்கையாகக் கட்டுப்படவில்லை. ஆகையால்தான், கொல்லாமை புலால் மறுத்தலுடன் சிறிதும் தொடர்பில்லாது, கொன்றேயாக வேண்டும், புலால் தின்றேயாக வேண்டும் என்ற கொலை வேள்விக் கொள்கையையுடைய சமயங்களும் மாற்றமடைந்து புலால் மறுத்தலைக் கூறுகின்றன. கொலை நெறிச் சமயங்களே இந்த மாற்றத்தை யடைந்த தென்றால், வேள்வியில் உயிர்க் கொலை செய்வதை எதிர்த்து எழுந்த சமய அடியார்களாகிய தத்துவப் போதகர், வீரமாமுனிவர், வேதநாயகம் பிள்ளை போன்றோர் புலால் மறுத்தலைக் கூறியறிவுறுத்தலில் எவ்வித வியப்புக்கும் இடம் இல்லையன்றோ ?

புலால் மறுத்தல் தமிழர்கள் பிற்காலத்தில் ஏற்றுக் கொண்ட உணவு முறையேயன்றித் தமிழகத்தில் தொன்று தொட்டு இருந்த உணவு முறை எனக் கொள்ள இடம் இல்லை. சங்க இலக்கியங்கள் தமிழ் மக்கள் புலால் உணவு உண்டு வந்ததைத் தெளிவாக விளக்குகின்றன.

சமயங்கள் யாவும் தமிழ் மக்களிடையே வந்து புகுந்தவையே என்பதை முன்னரே கண்டுள்ளோம். கிறித்தவ சமயமும் நம் தமிழகத்தில் கி. பி. முதல் நூற்றுண்டு முதலே இருப்பதற்கான ஆதாரங்கள் பல உள. [சான்றோர் யார்? பக்கம் 107 முதல் 120 முடியக் காண்க.]

# 4. கொலை வேள்வி - எதிர்ப்பு

தமிழகத்தில் பரவிய சமயங்களிடையே போட்டி இருந்தது வேள்வியில் உயிர்களைக் கொலை செய்யும் கொள்கையால் அவை இரண்டு அணியாய்ப் பிரிந்து நின்றன.

உயிர்க்கொலையும் புலாலுணவுமே சமயத்தின் அடிப்படை என வைதிகம் வற்புறுத்தியது. கடவுளுக்கு உயிர்க் கொலை செய்து வேள்வி வேட்டுப்பின் புலாலுணவாகிய அவியுணவை உண்ணுதலைச் சிறப்பித்தது வைதிகம்.

வேள்வியில் உயிர்க் கொலை கூடாது என்பதைச் சமணம், பௌளத்தம், கிறித்தவம் ஆகிய மூன்றும் வற்புறுத்தின.

சமண பௌளத்த கிறித்தவ சமயங்களுக்கு முற்பட்டது ஆரியர்களின் வைதிக சமயம். பல தெய்வ வணக்கக் கோட்பாட்டையுடைய இச்சமயம் இந்தியா முழுவதும் பரவி அரசர்களிடையேயும் பொதுமக்களிடையேயும் செல்வாக்குப் பெற்றிருந்தது. வேள்வியில் உயிர்க் கொலை செய்வதே இதன் அப்படிடைக் கொள்கை. பல்லாயிரக்கணக்கான உயிர்களைப் பலியிட்டு வேள்வி வேட்பதன் மூலமே மறுமையின் பத்தை அடைய முடியும் என்பதை வைதிகம் வற்புறுத்தியது. வேள்வி செய்வதற்கு அதிகம் பொருட் செலவு ஆயிற்று. ஆகவே, பெரிய மன்னர்களும்,

செல்வந்தர்களும் மட்டுமே வேள்வி வேட்டு மறுமை யின்பத்தை அடைய முடியும் என்ற நிலையை இது தோற்றுவித்தது. மன்னரிடையேயும் செல்வந்த ரிடையேயும் இது செல்வாக்குப் பெற்றது. பொது மக்களுக்கு மறுமை இன்பம் என்பது எட்டாக் கொம்பாய் விளங்கியது. அதே நேரத்தில் வேள்வியில் ஆயிரக்கணக்கான உயிர்கள் கொல்லப்படுவதைக் கண்ட நல்ல உள்ளங்கள் வருந்தின.

இதன் விளைவாக எல்லோரும் எளிதாகப்பின் பற்றக்கூடிய வழி ஒன்றைக் காண வேண்டும் என்றும் அவ்வழி உயிர்க்கொலை அற்றதாக இருக்க வேண்டும். என்றும் மக்கள் எண்ணினர்கள்.

இந்த எண்ணம் செயல்படத் தொடங்கியது. இதன் விளைவாக மூன்று சமயங்கள் எழுந்தன. அவற்றுள் இரண்டு கடவுள் நம்பிக்கையையே எதிர்த்து நாத்திக சமயங்களாக உருப்பெற்றன. மூன்ருவது கடவுள் நம்பிக்கை அடிப்படையிலேயே ஆத்திக சமயமாக உருப்பெற்றது.

இவை மூன்றுமே வேள்வியில் உயிர்களைக் கொலை செய்வதைக் கண்டித்தன. மூன்றும் மூவகைக் காரணங்களைக் கொடுத்தன.

காரணங்களால் அவை வேறுபட்டு விளங்கிய போதிலும் கடவுள் பெயரால் வேள்வி வேட்பதையும் அதில் உயிர்க்கொலை செய்வதையும் கடுமையாகக் கண்டித்தன.

காரணங்கள் எவ்வாறிருந்த போதிலும், அவை ஆத்திக சமயமாயினும் நாத்திக சமயமாயினும்

கொலை வேள்வியையே அடிப்படையாகக்கொண்ட வைதிக சமயத்தை அதன் அடிப்படையையே எதிர்த்த காரணத்தால் மேலே கண்ட மூன்று சமயங்களையும் ஒரே கூட்டு எதிரியாகப் பாவித்து அவை மூன்றையும் தனது முழு ஆற்றலால் வைதிகம் எதிர்த்தது.

கடைச் சங்க காலமெனக் கருதப்படும் கி. பி. முதல் இரண்டாம் நூற்றுண்டுகளில் தமிழகத்தில் நாம் மேலே கூறப்பட்ட நான்கு சமயங்களையும் காணக் கூடும். இப்பொழுது அவை ஒவ்வொன்றையும் தனித் தனியாக நோக்குவோம்.

1. வைதிகம் தமிழகத்தில் நுழைந்திருந்தது. அரசர்கள் அதன் வேள்விக் கொள்கைக் கேற்ப வேள்வி வேட்டுள்ளனர். அவ்வாறு வேள்வி செய்தவர்கள் தங்கள் பெயருடன் தாங்கள் வேள்வி செய்துள்ளதைச் சிறப்பித்து இணைத்துள்ளனர்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி முதலியோர் அவ்வாறு வேள்வி செய்தவர்களாக நமக்குப் புலப்படுகின்றனர்.

2. இவ்வேள்விக் கொள்கையை எதிர்த்து எழுந்த நாத்திகக் கொள்கைகள் இரண்டு.

1. பௌத்தம்: இது புத்தரால் தோற்றுவிக்கப் பட்டது. 'உயிரினங்கள் மீது இரக்கம் கொள்ள வேண்டும். உயிர்களைக் கொல்லக் கூடாது. உயிர்க் கொலை செய்து வேள்வி செய்வது தவறு' என்னும்

கொள்கைகளே வைதிகத்தை எதிர்த்து நாடெங்கும் பரப்பியது.

"புத்த சமயத்தை ஆக்கிய கௌதமசாக்கியர் நிருவாணம் அடைதற்குரிய எட்டு முறைகளுள், தீங்கற்ற உணவு கொள்ளுதலே ஒன்ருக வகுத்துக் கூறியிருக்கின்ருர். மேலும், அவர் "உயிர்க்கொலேக்கு உலகமெல்லாம் நடுங்குகின்றது; மக்களெல்லாரும் கரவிஃனக்கண்டு நடுங்குகின்றனர். உன்னிடத்திற் பிற உயிர்கள் எங்ஙனம் நடந்து கொள்ள வேண்டுமென்று நீ விரும்புகின்றனேயோ, அங்ஙனமே நீயும் அவைகளிடத்தில் நடந்துகொள்ளல் வேண்டும்; உயிர்க்கொலே செய்யாதே; எதனேயும் சாவப் பண்ணுதே" என்று அறிவுறுத்திய அறமொழியும் பௌத்த சமய நூல்களிற் காணப்படுகின்றது. ஆதலால் புத்தர் கொல்லாமை, புலாலுண்ணுமை என்னும் அறத்தில் தலேநின்றவராகக் காணப்படுகின்றனர்.

இன்னும் புத்தரையடுத்துத் தோன்றி உலகமெங்கணும் அவர்தம் அறமொழிகளேப் பரவச்செய்து வந்த அசோகமன்னன் தான் செதுக்கிய முதற் கல் வெட்டில் "உணவுக்காகவாவது, வேள்வி வேட்கும் பொருட்டாகவாவது எந்த உயிரையுங் கொலே செய்தல் ஆகாது." என்று பொறித்திருத்தலும், எட்டாவது கல்வெட்டில்,"மூச்சு விடும் எந்த உயிரையுங் கொலே செய்யப்படுதலினின்றும், பலியிடப் படுதலினின்றும் முற்றும் விலக்குதலால் மட்டுமே சமயமானது வளரும்" என்று பொறித்திருத்தலும் புத்தருடைய கொல்லாமை, புலாலுண்ணுமை அறத்தை நன்கு விளக்கிக்காட்டும்.

-மறைமலேயடிகள் - பொருந்தும் உணவும் பொருந்தா உணவும் - பக் 65-67.

மேலே காணும் கூற்றுகளே நாம் உற்று நோக்கினல் பௌத்தம் கொல்லாமையை வற்புறுத்தும்

காரணம் வேள்வியை மறுப்பதற்காகவே என்பது நன்கு விளங்கும். புத்தரும் பிம்பிசாரனை அவருடைய வேள்விக்களத்தில் சந்தித்து ஆடுகள் பலியிடப்படுவதை நிறுத்திப் பௌத்தராக்கியமையை வரலாற்றில் காணுகிறோம்.

அவ்வாறே சமணமும் கொல்லாமையையும் புலால் மறுத்தலையும் வற்புறுத்தியது. சமணம் பௌத்தத்திலும் ஒரு படி தாண்டிப் புலால் உண்ணலைக் கண்டித்ததெனலாம்.

"வேள்வியில் கொல்லப்படும் உயிரும் நம்மைப் போன்ற உயிரே. உயிர்கள் ஓரறிவு முதல் ஆறறிவு ஈருகப் பகுக்கப்பட்டிருப்பினும் அவைகளுக்கிடையே வேற்றுமை இல்லை. ஆன்மாவில் யாவும் சமமே: ஆகவே, எந்த உயிரினத்தும் தீங்கு ஏற்படுமாறு நடந்து கொள்ளக்கூடாது" என்பதை மிகவும் அழுத்தமாகக் கூறியது சமணம். பிற உயிரினத்துக்குத் தீங்கு செய்யும் ஆன்மா அடுத்த பிறவியில் துன்புற்றே தீரும் எனக்கூறி ஆரியர்களின் வேள்விக் கொள்கையை மிக வன்மையாகச் சமணம் கண்டித்தது.

மேலே கண்ட பௌத்தமும் சமணமும் வேள்வி மறுப்புக் கொள்கையில் நாத்திக வாதத்துடன் அதாவது கடவுட் கொள்கையை மறுத்துப் பிறவிச் சுழற்சிக் கொள்கை விளக்கத்தின் அடிப்படையில் தோன்றிப் பரவி வந்தன.

பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கும் கடவுட் கொள்கைக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. ஆகவே, வைதிக சமயத்தாரின் கொள்கையைக் கூறும் பழமையான வேதங்களில் பிறவிச் சுழற்சிக் கொள்கையான மறுபிறவியுண்மையும், ஊழ்வினையுண்மையும் காணல் இயலாது என்பது மறைமலையடிகளின் கருத்து ஆகும்.

-"இருக்கு வேதத்தில் ஆரியராற் பாடப்பட்ட பதிகங்களில் மறுபிறவியுண்மையும், ஊழ்வினையுண்மையும் எள்ளளவு தானுங் குறிப்பிடப் படுதலைக் காணோம்"

மறைமலையடிகள்—தமிழர் வேதம் பக். 149

பிறவிச் சுழற்சிக் கொள்கையையுடைய நாத்திக சமயங்களான சமணம் தோன்றிய அதே ஆசியாவில் புதிய ஓர் இயக்கம் தோன்றிப் பல நாடுகளிலும் பரவலாயிற்று. அவ்வியக்கம் நம் தமிழகத்திற்கும் கி. பி. முதல் நூற்றாண்டில் தூய தோமையர் என்பவரால் கொண்டு வரப்பட்டமையையும், அதன் பின்னடியார் வழிவழியாக இன்றுவரை நம்மிடையே இருப்பதையும் வரலாற்றை ஆய்ந்து கற்போர் அறிந்து கொள்ள முடியும்.

அவ்வியக்கம் தோன்றக் காரணமானவர் இயேசு கிறித்து என்பவர். கிறித்தவம் எனப்படும் அவ்வியக்கத்தைச் சேர்ந்தவர்கள் (சான்றோர்) உயிர்க்கொலை நிறுத்தப்பட வேண்டும் என்பதற்குப் புதியதொரு விளக்கத்தைக் கொடுத்தனர். அவ்விளக்கம் பிறவிச் சுழற்சிக் கொள்கையுடைய பௌத்த சமண சமயங்களின் நாத்திக விளக்கத்திலிருந்து மாறுபட்டதாகக்

கடவுள் ஒருவர் உண்டு என்னும் ஆத்திக வாதத்தில் அமைந்ததாக இருந்தது. அவர்கள் பலியிடும் நோக்கத்தை ஏற்றுக் கொண்டு, அந்நோக்கம் இயேசு கிறித்துவில் நிறைவேறி விட்டதால் கடவுளுக்கு உயிர்களைப் பலியிடல் இனித் தேவையில்லை என மறுக்கின்றனர். அவர்கள் கூறும் விளக்கமாவது:—

ஆதிகாலத்திலிருந்து கடவுளுக்குப் பலி செலுத்தப்பட்டு வந்ததன் நோக்கம் தவறுள்ள ஒரு மனிதன் தன்னுடைய தவற்றிலிருந்து விடுதலை பெறும்படியாக, தவறுள்ள அவன் தண்டிக்கப்பட்டுக் கொல்லப்படுவதற்குப்பதில், எந்தத் தவறுமே இல்லாத மாசற்ற ஓர் உயிரை அவனுக்குப் பிணையாகக் கடவுளுக்குப் பலியிடுதல்.

இதுவே வேள்வியில் உயிர்களைப் பலியிடுவதன் நோக்கம். இந்த நோக்கம் இயேசு கிறித்துவில் நிறைவேறி விட்டது என்பதே அவர்கள் கொள்கை. அக்கொள்கையை விவிலியத்தின் வாயிலாக நோக்குவோம்.

"உண்மையில் திருச்சட்டப்படி ஏறக்குறைய எல்லாமே இரத்தத்தினால் தூய்மையாக்கப்படுகின்றன. இரத்தம் சிந்துதல் இல்லாமல் மன்னிப்பு என்பது இல்லை:"
—எபிரேயர்: 9:22.

"கிறிஸ்துவும் பல்லோர் பாவங்களைப் போக்கும் பொருட்டு ஒரே முறையில் எக்காலத்திற்குமே தம்மைத்தாமே ஒப்புக் கொடுத்தார்." —எபிரேயர். 9:28.

"ஏனெனில் தம்மைத்தாமே ஒப்புக் கொடுத்த போது ஒரே முறையில் எக்காலத்திற்குமே பலியை நிறைவேற்றி விட்டார்." —எபிரேயர்: 7:27.

"உண்மையில் ஆட்டுக் கடாக்கள், காளை மாடுகள் இவற்றின் இரத்தமும், கிடாரியின் சாம்பலும், மாசுள்ளவர்கள் மீது தெளிக்கப்படும் பொழுது, உடலின் தூய்மையைப் பொறுத்தவரை, அவர்களைப் பரிசுத்தராக்குமெனில் முடிவில்லாத தேவ ஆவியால் தம்மையே மாசற்ற பலியாய்க் கடவுளுக்கு ஒப்புக் கொடுத்த கிறிஸ்துவின் இரத்தம், நாம் உயிருள்ள கடவுளுக்கு வழிபாடு செலுத்தும்படி நம்முடைய மனச்சாட்சியைச் சாவுக்குரிய செயல்களிலிருந்து எவ்வளவோ மேலாகத் தூய்மைப்படுத்தும் அன்றோ?

—எபி. 9:13-14.

"காளைமாடுகள் ஆட்டுக்கடாக்கள் இவற்றின் இரத்தம் பாவங்களைப் போக்க முடியாது."

—எபிரேயர்: 10 : 4.

"ஒரே முறையில் எக்காலத்திற்குமே ஒப்புக் கொடுக்கப்பட்ட இயேசு கிறிஸ்துவுடைய உடலின் பலியால் நாம் பரிசுத்தராக்கப்பட்டோம்."

எபிரேயர்: 10 : 10.

"தாம் பரிசுத்தராக்கியவர்களை ஒரே பலியினால், என்றென்றைக்கும் நிறைவுள்ளவர்களாக்கினார்"

எபிரேயர்: 10 : 14.

"அவர்களுடைய பாவங்களையும் அக்கிரமங்களையும் இனி நினையேன் என்று தொடர்ந்து சொல்கிறார். இவற்றிற்கு மன்னிப்புக் கிடைத்த பின், பாவப் பரிகாரப் பலிக்கு இடமேயில்லை" எபிரேயர்: 10 : 18

இயேசு கிறித்துவிற்குப் பின்னர் உயிர்க் கொலையாகிய வேள்வியோ பலியோ தேவை இல்லை என்பதும், அவ்வாறு தேவையில்லாத நிலையில் வேள்வி

வேட்பதும், வேள்வியில் உயிர்க் கொலை செய்வதும் தவறு என்பதும் கிறித்தவக் கொள்கையாகும்.

இதுவரை நாம் பார்த்து வந்தவைகளிலிருந்து வேள்வியில் உயிர்களைப் பலியிடும் முறையை எதிர்த்த மூன்று சமயங்கள் கி. பி. முதல் நூற்றாண்டில் நம் தமிழகத்தில் பரவின. இம்மூன்று சமயங்களும் அதற்கு முன்னர் தமிழகத்திற்கு வந்து விட்ட வேள்வியில் உயிர்ப் பலியிட வேண்டும் எனக் கூறும் கொலை நெறியாகிய வைதிகத்தை எதிர்த்துப் போராடிக் கொல்லாமை சூழும் நெறியை அறிவித்தன. இப் போது வள்ளுவர் கூறும் நெறியை நோக்குவோம். சமயம், நெறி, ஆறு, வழி என்பன ஒரு பொருள் குறித்தவையே.

# 5. கொல்லாமை சூழும் நெறி

திருவள்ளுவரிடம் சென்று வீடுபேறுகட்குச் சிறந்த நல்ல நெறி எது என வினவினால் அவ்வினாவிற்கு வள்ளுவர் கொடுக்கும் பதிலாக வைதிகசமய உரையாசிரியர் பரிமேலழகர் கூறுவது:-

"மேற்கதி வீடுபேறுகட்கு நல்ல நெறி என்று சொல்லப்படுவது யாது என்று வினவின், அஃது யாதோர் உயிரையும் கொல்லாமையாகிய அறத்தினைக் காக்கக் கருதும் நெறி".

" நல்லா றெனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி." —324.

இவ்வளவு தெளிவாக வைதிக நெறியாகிய கொலை நெறியைக் கண்டித்து எழுந்த திருக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர், திருக்குறளை கொலை நெறியாகிய வைதிக சமயச் சார்பாகக் காட்ட முற்பட்டது ஏன்? மேலும் " இதனால் இவ் அறத்தினை உடையதே நன்னெறி என்பது கூறப்பட்டது" எனத் தேற்றேகாரம் இட்டு விளக்கம் கூறிய பரிமேலழகர் தடுமாற்றம் அடைந்தது ஏன்? இவை ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய கேள்விகள். திருவள்ளுவர் கொல்லாமையையும் புலால் மறுத்தலையும் கூறும் இடமும், கூறும் முறையும் பௌத்த சமண சமயங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டுக் காணப்படுகின்றன. பௌத்த சமணர்கள் வேள்விக் கொள்கைக்கு முற்றிலும் மாறுபட்டவர்கள்;

அக்கொள்கையே தவறு எனக் கூறுபவர்கள். ஆனால், வள்ளுவரோ வேள்விக் கொள்கையை உடன்பட்டு மறுப்பவராகவே காணப்படுகிறார்.

"வேள்வியை வள்ளுவர் ஒப்புக் கொண்டாலும் மறைந்த அறிஞர்களுக்குக் கடமை ஆற்றுதலை அவர் ஒப்புக் கொண்டாலும், கடவுள் வழிபாடு முதலியவற்றை அவர் ஒப்புக் கொண்டாலும், அவற்றின் பொருட்டு ஊன் படைக்கும் காரணத்தையும் கொலை செய்யும் காரணத்தையும் அவர் சிறிதும் ஒப்புக் கொள்ளாமல் மறுக்கிறார்."

-திருக்குறள் பீடம் அழகரடிகள் — திருக்குறள் அறம் பக். 158.

ஆகவே, வள்ளுவர் வேள்வியை ஒப்புக்கொண்டு மறுக்கிறார் என்பது தெளிவு. வேள்வியை ஒப்புக் கொண்டு மறுப்பதைப் போன்றே, வேள்வியில் உயிரைக் கொலை செய்வதால் பயனுண்டா? என்னும் கேள்விக்கும் வள்ளுவர் சமண பௌத்தர்போலப் பதில் கூறாது உடன்பட்டே மறுக்கிறார். கொன்றதனால் ஆக்கம் உண்டா? அது பெரிய ஆக்கமா என்ற கேள்விகளுக்கு வள்ளுவர் பதில் "நன்று ஆகும் ஆக்கம் பெரிது" என உடன்பாடுகொண்டே வெளி வருகிறது. பின்னரே அதை மறுக்கிறார். "சான்றோர்க்கு அது கடை" என்பதே அவர் முடிபு. ('சான்றோர் யார்?' புத்தகம் காண்க சான்றோரை அறிய) அவர் கூறும் குறள் இது:

"நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை". —328

இதில் 'எனினும்' என்னும் சொல்லால் வள்ளுவர் இரு கொள்கைகளை இணைக்கிறார்.

1. நன்றாகும் ஆக்கம் பெரிது.
2. சான்றோர்க்குக் கொன்று ஆகும் ஆக்கம் கடை.

மேலே காணும் இரண்டு குறிப்புகளுக்கும் உரை கொடுக்கும் நாகை சொ. தண்டபாணிப் பிள்ளையின் கூற்று, பின்வருமாறுளது.

1. வேள்வியில் உயிரைக் கொன்றால், துறக்கம் முதலிய இன்பந்தரும் செல்வங்கள் பெரிதும் உண்டாம்.

2. அருளுடைமை முதலாகிய அறங்களால் நிறைந்தார்க்கு ஒருயிரைக் கொன்று பெறப்படும் செல்வம் இழிவுடையதாம்.

மேலே கூறப்பட்ட பகுதிகள் வள்ளுவர் வேள்வியையும், வேள்வியில் உயிர்ப்பலி இடுவதனால் வரும் பயனையும் சமண பௌத்தர்களைப்போன்று முற்றிலும் மறுத்து விடாது, உடன்பட்டு மறுக்கிறார்.

சமண பௌத்த மதங்களின் அடிப்படைக் கொள்கைக்கு நேர் முரண்பட்ட கொள்கையான கடவுள் கொள்கையையுடையவராக வள்ளுவர் விளங்குகிறார். இதனைக் கண்ணுற்ற பரிமேலழகரால் உண்மையை உணர முடியாத நிலையில் சகண பௌத்த சமயங்களுக்கு மாறுபட்ட சமயம் வைதிகம் மட்டுமே என நினைத்து வைதிக சமயத்துடன் வள்ளுவரை இணைத்துப் பொருள் கூறினர் என எண்ண வேண்டியுள்ளது. வேள்வியையும் கொன்று ஆகும் ஆக்கத்தையும் உடன்பட்டு மறுப்பதால், அதற்கான சமய

அடிப்படையைக் காண முடியாத நிலையில் வைதிக சமயத்தில் புரட்சி செய்தவராகவே பரிமேலழகர் வள்ளுவரைக் கருதினர் எனவே கொள்ளவேண்டியுள்ளது.

ஆயினும், வள்ளுவர் வேள்வியில் உயிர்க்கொலை செய்தே ஆகவேண்டும் எனக் கூறும் நெறியாளரை எவ்வளவு வேகமாகத் தாக்குகிருர் என்பதையும் பரிமேலழகர் உற்று நோக்கவில்லை போலும்.

வேள்வியில் உயிர்க்கொலை செய்யப்பட்டேயாக வேண்டும் என வற்புறுத்துபவர்கள் யாவரும் சான்ருேர் முன்னிலையில் புலைத்தொழில் செய்யும் மாக்களாகவே கருதப்படத்தக்க கீழானவரோ ஆவார் என்பது வள்ளுவர் முழக்கம்.

"கொலைவினையராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவார் அகத்து". —329

"புன்மை தெரிவார் அகத்து" என வள்ளுவர் கூறும் பகுதி ஆழ்ந்த கருத்துடையது. கொலை வினையின் புன்மை தெரிந்த சான்ருேர் வேள்வியில் உயிர்களைக் கொலை செய்யாமலும், கொன்றதை அவிப்பங்காகப் பெற்று உண்ணுமலும் தாங்கள் இருப்பதுடன் மற்றவர்களையும் அவ்வாறு இருக்குமாறு வேண்டுகின்றனர். ஆகவே, உயிர்களுக்கு அவற்றின் மீதிருந்த ஒரு பெருந்தளையை வெட்டி உயிர்களை விடுவித்துள்ள காரணத்தால் அவ்வுயிர்கள் யாவும் அவ்வாறு விடுவிததவர்களைத் கைகூப்பித் தொழும்.

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்." (260)

திருவள்ளுவர், கொல்லாமை சூழும் நெறியாகிய கொல்லாமை, புலால் மறுத்தல் முதலியவைகளைத் துறவறத்தில் கூறக்காரணம் என்ன? பௌத்தமும் சமணமும் இவைகளை யாவருக்கும் பொதுவாகக் கூறியிருக்கும் பொழுது, வள்ளுவர் அதிலிருந்து மாறு பட்டுத் துறவியருக்கேயுரிய நெறியாகக் கூறக் காரணம் என்ன? இல்லறத்தார் கொல்லலாம், புலாலுண்ண லாம் என்பது பொருளா? அல்லது வள்ளுவர் பொதுவான கொலையையும் புலால் மறுத்தலையும் சுட்டாது, சமயத்தின் பெயரால் அதாவது ஒரு நெறி யின் பெயரால் கொலை செய்வதையும், புலால் உண்ணுவதையும் கொள்கையாகக் கொண்ட கொலை நெறிக் கொள்கையைக் கண்டிப்பதற்காக இவ்வாறு கூறுகின்றாரா? இவை சிந்திக்கத் தக்கவை.

பொதுவறம் கூறவேண்டிய இடம் இல்லறவியல். கூறவந்த நெறியின் சிறப்பறம் கூறவேண்டிய இடம் துறவறவியல். வள்ளுவர் நோக்கில் கொல்லாமை நெறி பற்றி இல்லறம் துறவறம் ஆகிய இவற்றிற் கிடையே வேற்றுமையுண்டா? விளக்கத்தை அழ கரடிகள் மூலம் நோக்குவோம்.

"இல்வாழ்க்கை என்னும் அதிகாரத்திலும், ஏனைய இல்லற இயல் அதிகாரங்களிலும் மக்களினம் மக்களினத் துக்கு ஆற்றுங்கடமைகளே உதவிகளே பெரிதும் பேசப் படுதலும், துறவறவியலில் மக்களினத்தோடு எல்லா உயிர்களின் நலங்களிலும் கருத்திருத்தி நடந்து கொள்ளும் நெகிழ்வுடைமையே பெரிதும் பேசப்படுதலுங் காணலாம்"

— திருக்குறள் அறம் - பக் 69.

மேலும் விளக்கத்தைத் தவத்திரு குன்றக்குடி அடிகளார் மூலம் அறியலாம்.

இல்லறத்தார் புலால் உண்ணுவதை வள்ளுவர் ஏற்றுக் கொண்டார் எனக் கூறும் தவத்திரு. குன்றக்குடி அடிகளாரின் கருத்துத் தள்ளிவிடக் கூடிய ஒன்று அன்று.

"திருவள்ளுவர் 'புலால் மறுத்தல்' அதிகாரத்தைத் துறவற இயலில் வைத்துள்ளார். ஆதலால், புலால் உண்ணாமை எல்லாரும் மேற்கொள்ளக் கூடிய ஒழுக்கமன்று என்று திருவள்ளுவர் கருதினார் போலும் எனக் கருதவும் இடம் உண்டு."

"திருவள்ளுவர் இல்லற இயலிலும், குடியியலிலும் புலால் உண்ணாமையைக் கூறவில்லை; துறவிகள் அல்லாதார் புலால் உண்ணுதலுக்கு உடன் பட்டார் என்பது நமது கருத்து."

"இப்போது உலகத்தை நெருக்கடியில் ஆழ்த்தியுள்ள உணவுச் சிக்கலுக்குச் சரியான தீர்வு புலால் உண்ணுதலைப் பெருக்குதல் என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். இன்றைய அறிஞர்களின் கருத்து இரண்டாயிரமாண்டுகளுக்கு முன் தோன்றிய திருவள்ளுவரின் சிந்தனை."

— தவத்திரு. குன்றக்குடி அடிகளார் - குறட் செல்வம்
பக் : 102-103.

ஆகவே, வள்ளுவர் நோக்கில் கொல்லாமை, புலால் மறுத்தல் பற்றிய கொள்கையில் இல்லறம் துறவறம் இவற்றிற்கிடையே தெளிவான வேறுபாடு இருப்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

இப்போது இதை இன்னமும் தெளிவாக அறிந்து கொள்ளும் வழியில் திருவள்ளுவர் காட்டும் இல்லறம் துறவறம் இவைகளின் தன்மையை நோக்குவோம்.

# 6. இல்லறமும் துறவறமும்

இல்லறம் சிறந்ததா ? துறவறம் சிறந்ததா ? இதற்கு விடை, ஒவ்வொரு சமயத்தாலும் ஒவ்வொரு விதமாகக் கொடுக்கப்படுகிறது. இங்கு நாம் ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட வேதமதத்திற்கு மாறுபட்ட சமயங்களான சமணம், பௌத்தம், கிறித்தவம் ஆகிய மூன்று சமயங்களின் கொள்கையை நோக்கினுல் இம்மூன்றும் இரண்டு அணிகளில் பிரிந்து விடுகின்றன. பௌத்தமும் சமணமும் ஓர் அணியில் இணைகின்றன. கிறித்தவம் இவற்றிற்கு மாறுபட்டு நிற்கிறது.

பௌத்தமும் சமணமும் துறவறமே உயர்ந்தது எனத் தேற்ற ஏகாரம் இட்டுக் கூறுகின்றன; பிறவிச் சுழற்சியிலிருந்து விடுதலை பெற்று முக்தி நிலையை அடைவதற்குத் துறவறம் ஒன்றே வழி எனச் சொல்லுகின்றன ; சிறந்த முறையில் இல்லறத்தை நடத்துபவர்கள் அடுத்த பிறவியில் துறவியாகப் பிறந்து பின்னரே வீடு பேறு அடைய முடியும் எனக் புகல்கின்றன.

ஆகவே, இல்லறம் துறவறம் ஆகிய இரண்டையும் ஒப்பிட்டால் இல்லறம் இழிந்தது என்றும், துறவறமே உயர்ந்தது என்றும் பௌத்த சமண சமயங்கள் வரையறை செய்கின்றன.

ஆனுல், கிறித்தவமோ இவற்றிற்கு மாறுபட்டு விளக்கம் கொடுக்கின்றது.

கடவுள் முதன் முதலில் படைத்துச் சிறப்பித்தது இல்லறத்தையே ஆகும். ஆகவே, இல்லறம் புனிதமானது. ஆதம் என்ற இல்வாழ்வானையும் ஏவாள் என்ற வாழ்க்கைத் துணைவியையும் கடவுள் படைத்து அவர்கள் இருவரும் ஒரே இரத்தமும் தசையுமாக வாழும்படி ஆசீர்வதித்தார் என்று விவிலிய பழைய ஏற்பாடு குறிப்பிடுகிறது. முதல் முதல்இல்லறத்தைப் படைத்தவர் கடவுளே. கிறித்தவர்களின் புதிய ஏற்பாட்டின் படி கடவுள் மனிதனாக இவ்வுலகத்தில் வந்த போதும் தன்னை முதல் முதலில் வெளிக்காட்டியது ஒரு திருமணத்திலேயே ஆகும். கானாவூர் என்ற ஊரில் நடைபெற்ற திருமணத்தில்தான் இயேசு பெருமானார், அத்திருமண வீட்டில் ஏற்பட்ட குறைவை நிறைவாக்கித் தமது பணியைத் தொடங்கினார்.

இப்போது கிறித்தவர்கள் தங்கள் கூட்டமாகிய திருச்சபையை மணமகளாகவும், கடவுளை மணமகனாகவுமே கருதுகின்றார்கள். ஆகவே, கிறித்தவர்கள் சமண பௌத்தர்களைப் போன்று இல்லறத்தை இழிவானதாகக் கருதுபவரல்லர்; அதே நேரத்தில் துறவறத்தையும் இழிவானதாகக்கருதுவதில்லை.

கிறித்தவக் கொள்கைப்படி கடவுள் இயேசுவாகிய மனிதனாய் இவ்வுலகில் வாழ்ந்த காலை ஒரு துறவியாகவே வாழ்ந்துவந்தார்; மற்றவர்களுக்குத் தொண்டு செய்பவராகவே வாழ்ந்துள்ளார்; தமக்காக வாழாது மற்றவர்களுக்காக வாழ்ந்துள்ளார். ஆகவே, இயேசு பெருமானைப் பின்பற்றித் தங்கள் வாழ்க்கையை மற்றவர்களுக்காகவே வாழ விரும்பும்

கிறித்தவ அடியார்கள், தங்களின் முழுநேரத்தையும் உலக மக்களுக்காகச் செலவிடும் வாய்ப்புக் கருதித் துறவறத்தை ஏற்றுக் கொள்ளுகிறார்கள்.

இதுவே இல்லறம் துறவறம் பற்றிய கிறித்தவர்களின் நிலை. இந்நிலையில் அவர்களிடம் இல்லறம் சிறந்ததா ? துறவறம் சிறந்ததா? எனக் கேள்வி கேட்கப்படுமானால், அக்கேள்வியே பொருளற்றது என்பது தான் அவர்களுடைய பதிலாக அமைகிறது; ஏனெனில் 'ஒரு விதத்தில் இல்லறம் சிறந்தது. இன்னொரு விதத்தில் துறவறம் சிறந்தது' என்பது அவர்களின் கொள்கை. ஆனால், ஒன்று மட்டும் அவர்களுக்குத் தெளிவு. 'இல்லறம் முந்தியதா" துறவறம் முந்தியதா? எனக் கேள்வி கேட்கப்படுமானால், அவர்கள் எவ்வித ஐயத்திற்கும் இடமின்றி 'முதலில் இல்லறம், பின்னரே துறவறம்' எனக் கூறுவார்கள். துறவிகள் யாவரும் இல்லறத்திலிருந்து தோன்றியவர்கள். ஆகவே, துறவறம் இல்லறத்திலிருந்துதான் பிரிகிறதேயன்றி, இல்லறம் துறவறத்திலிருந்து தோன்றுவதன்று. ஆகவே, இல்லறம் அடிமரம், துறவறம் அதன் கிளை. அடிமரம் இன்றேல் கிளையில்லை. இல்லறம் இன்றேல் துறவறம் இல்லை. கிளையில்லா அடிமரம் நிலைபெறும். துறவறம் இன்றேல் இல்லறம் உண்டு.

ஆகவே, கிறித்தவர் கொள்கைப்படி இல்லறமும் துறவறமும் அவ்வவ்வறத்தில் சிறப்பாக இருப்பதற்கேற்பவே சிறப்புப்பெறும். இரண்டும் புனிதமானவையே. அவற்றிற்கிடையே உயர்வு தாழ்வு இல்லை.

இல்லறம் முந்தியது; துறவறம் பிந்தியது. ஆகவே, முதலில் கூறப்பட வேண்டுவது இல்லறம்; இரண்டாவதாகக் கூறப்பட வேண்டுவது துறவறம். இல்வாழ்வானை விடத் துறவிக்குச் சில தனிப் பொறுப்புகள் உண்டு. ஆனால், சமண பௌத்தக் கொள்கையோ இதற்கு எதிர்மாறானது. அவை பிறவிச் சுழற்சியிலிருந்து விடுபடுவதற்குத் துறவறம் ஒன்றே வழி என்றும் துறவியாய்வாழ இயலாதவர்களே இல் வாழ்பவர்கள் என்றும் கருதுகின்றன. பயன்படுவதில் துறவறத்தைக் காட்டிலும் குறைவுபட்டதே இல் வாழ்க்கை. எனவே, துறவறத்திற்கும் முதலிடமும் இல்லறத்திற்குக் கடைசியிடமுமே உண்டு.

சமண பௌத்த சமயங்களில் துறப்பவர்கள் தங்கள் ஆன்ம நலன் ஒன்று கருதியே துறக்கின்றார்கள். ஆனால், கிறித்தவத்திலோ கடவுளுக்காக அவர் தொண்டைச் செய்யும்படியாக மற்ற உலக மக்களுக்கு நன்மை செய்வதற்காகவே துறவிகள் துறக்கின்றார்கள். ஆகவே, துறவிகளின் நோக்கங்களில் வேற்றுமை இருக்கிறது.

கிறித்தவத்தில் இல்லறம் துறவறங்களிடையே ஏற்றத் தாழ்வு இல்லை. ஆனால், எவ்வறத்தில் நின்றாலும் அவ்வறத்தின் வழியாகச் செயல்படும் உள்ளமே, மனமே, முக்கியம். மனத்திற்கேற்பவே அறம் சிறப்படைகிறது. இழிந்த மனத்தையுடைய துறவியினும் உயர்ந்த மனத்தையுடைய இல்வாழ்வானே உயர்ந்தவன். அவ்வாறே இழிந்த மனத்தை யுடைய இல்வாழ்வானிலும் உயர்ந்த மனத்தை யுடைய துறவியே உயர்ந்தவன். ஆகவே, மனமாகிய

உள்ளத்திற்கே முதலிடம் உண்டு அறத்தின் இருப்பிடம் அதுவே. இப்பொழுது திருவள்ளுவரின் அறத்தைப் பற்றிய அறிஞர்களின் கருத்தை நோக்குவோம்.

"அன்றியும் நாலடியார் துறவறவியலில் தொடங்கு கிறது. இல்லற இயலோ அடுத்து வைக்கப்பட்டுள்ளது. அது சைன மரபு. திருவள்ளுவர், "அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை என்பதாலும், இல்வாழ்க்கை அறத்தாற்றின் ஆற்றின் புறத்தாற்றிற்போய்ப் பெறுவதொன்றில்லை' எனக் கூறுவதாலும் இல்லறமே சிறந்தமை தெரிவிக்கப் பெறுகின்றது."

—மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர்—'திருக்குறள் அழகும் அமைப்பும்' -பக் 63

"பொதுவாக அறத்தை இல்லறம், துறவறம் என இரண்டாகப் பாகுபடுத்துவர். ஒருசிலர் 'இல்லறம் பெரிதா? துறவறம் பெரிதா?' என்னும் வினவை எழுப்பி வள்ளுவர் இல்லறத்தையே பெரிதும் பாராட்டுகிறார் எனக்கூறுவதில் ஆர்வமிக்கவர்களாக உள்ளனர். ஆயின், திருக்குறளை ஆய்ந்து பயிலும்போது, இல்லறம், துறவறம் என்பன இருவேறு அறங்களல்ல என்பதும், அறம் என்னும் ஒன்றின் இருவேறு நிலைகள்—படிகள்-என்பதும் தெரியவரும். இல்லறம் அன்பின் அடிப்படையில் தொடங்கப்பெறுகிறது. துறவறம் அருளுடைமையில் தொடங்குகிறது. அன்பும் அருளும் இருவேறு உணர்வுகளல்ல: ஒன்றன் மலர்ச்சியே பிறிதொன்று."

-ப. அருணாசலம்:- குறளின் செய்தி-பக் 12, 13.

"துறவு என்றால் மனைவியையும் மக்களையும் வெறுத்து ஒதுக்கிவிட்டு, வேற்றிடஞ் சென்று உடலை வருத்திச் செய்யும் தவத்தையும், அவர்கள் மேற் கொள்ளும் கோலத்தையுமே

நாம் எண்ணுகிறோம். இதன் விளைவாகத் துறவினைக் கடிவதில் ஆர்வங்காட்டுகிறோம். நாம் வாழும் இல்லறத்துக்குப் பரிந்து பேசும் வழக்கறிஞராகிறோம்."

குறளின் செய்தி - பக் - 34

"இல்லறம் துறவறம் இரண்டும் கடமைகளின் பாற்பட்டனவே. இல்வாழ்வான் கடமைகள் சற்றுத் தன்னலச் சார்பும், குடும்பச் சார்பும் தழுவியனவாக இருக்கும். இந்த வாழ்க்கைக்குச் சில விதிகள் உண்டு. துறவற வாழ்க்கைக்குத் தன்னலச் சார்பே இல்லாத—பிறர்நலம் கருதிச் செய்கின்ற கடமைகளே உண்டு. இங்கு விதிவிலக்குகள் மிகமிகக்குறைவு. ஏன்? இல்லை என்றே கூறலாம். ஆயினும் இவ்விருவகை வாழ்க்கையின் இலட்சியமும் கடமைகளைச் செய்தலேயாகும். துறவறம் அல்லது தவ வாழ்க்கை என்பது கடமைகளினின்றும் விடுதலை பெறுதலன்று. கதே என்ற தத்துவ ஞானி கூறியது போல, ஞானிகளின் கடமை உலகைத் துறந்து ஓடிவிடுவதன்று. உலகத்தோடு ஊடுருவி உண்ணின்று அதன் இயல்பறிந்து அதனுள் வீழாமல்—வீழ்பவர்களையும் காக்கப் பணிகள் செய்தலேயாகும்"

-குறட்செல்வம்-பக் 104-105.

"ஆதலால் தமக்குரிய கடமைகளைச் செய்தலையே திருவள்ளுவர் தவம் என்று கருதுகிறார். இல்லறத்தாராக இருப்பாராயின் தமது மனைவி மக்கள் சுற்றம் தழுவிப் பாதுகாத்து வாழ்தல் கடமை. துறவறத்தாராக இருப்பாராயின் மனித சமூதாயத்தையே தழுவி, அவர்கள் நன்னெறி நின்றொழுகி நல்லின்பத்தோடு வாழச் சிந்தனையாலும் செயலாலும் கடமைகளைச் செய்தல் வேண்டும். இஃதன்றி, உலகியலை ஒழித்த தவம் என்று பொருள் கொள்ளுதல் சிறப்புடையதன்று."

தவத்திருகுன்றக்குடி அடிகளார் குறட்செல்வம்-பக் 105-106

திருவள்ளுவர் வைதிக சமய நெறியாகிய நான்கு வகை ஆசிரமப் பிரிவுகளான, பிரமச்சரியம், கிருகஸ்தம், வானப்பிரத்தம், சன்னியாசம் ஆகியவற்றை மறுத்து, இல்லறம் துறவறம் ஆகிய இரண்டையே கூறியுள்ளார். ஆகவே, வள்ளுவர் கூறும் துறவறம் மனைவி மக்களுடன் வாழ்ந்து பின்னர் அவர்களைத் தவிக்க விட்டுவிட்டுத் தன்னலம் ஒன்றே கருதிச் செயற்படும் துறவறம் அன்று.

சமண பௌத்தர்களைப் போன்று, பிறவிச் சுழற்சியிலிருந்து விடுபடும் வழி துறவறம் ஒன்றே எனக் கூறுவதும், இல்லறத்தை இழிவு எனக் கூறுவதும், துறக்கத்திராணியற்றவர்கள் மேற் கொள்ளுவதே இல்லறம் எனக் கூறுவதுமான நெறி வள்ளுவருடையதன்று.

துறவியாகிய தவத்திரு. குன்றக்குடி அடிகளார் கூறுவது போன்று வள்ளுவர்காட்டும் இல்லறமும் துறவறமும் இரண்டு கடமைகளின் பாற்பட்டனவே. ஒன்று குடும்பம் சார்ந்த கடமை; மற்றது உலகம் சார்ந்த கடமை. இல்லறத்தார், துறவி ஆகிய இவர்களுள் யார் சிறப்புக்குரியவர் ? தமது கடமையை ஒழுங்காகச் செய்பவரே. அடிகளார் குறிப்பிடுவதில் "பிறர் நலம் கருதிச் செய்கின்ற கடமையில் விதிவிலக்குகள் மிகமிகக் குறைவு. ஏன்? — இல்லையென்றே கூறலாம்" என்பது ஆயத்தக்கது.

"திருவள்ளுவர் 'புலால் மறுத்தல்' அதிகாரத்தைத் துறவற இயலில் வைத்துள்ளார். ஆதலால், புலாலுண்ணமை எல்லாரும் மேற்கொள்ளக்கூடிய ஒழுக்கமன்று

என்று திருவள்ளுவர் கருதினர் போலும் எனக்கருதவும் இடமுண்டு. திருவள்ளுவர் இல்லற இயலிலும், குடியியலிலும் புலால் உண்ணுமையைக் கூறவில்லை. துறவிகள் அல்லாதார் புலால் உண்ணுதலுக்கு உடன்பட்டார் என்பது நமது கருத்து... ஆனாலும் துறவிகள் புலால் உண்ணக்கூடாது என்பதுதிருவள்ளுவரின் திட்டவட்டமான கருத்து''

அடிகளாரது குறட் செல்வம் -பக்கம்—102-103

துறவியாகிய குன்றக்குடி அடிகளார் தெரிவிக்கும் இக் கருத்து நன்கு ஆழ்ந்து ஆயத்தக்கது. இப்போது புலால் மறுத்தலை இல்லறத்தார், துறவறத்தார் ஆகிய யாவருமே பின்பற்ற வேண்டும் என அறுதியிட்டுக் கூறும் சைவ சமயத்தின் தலைமைப் பதவியில் வீற்றிருப்பவரே அடிகளார்.

வள்ளுவர் வாய்மொழியே சைவ சித்தாந்தத்திற்கு அரண் செய்வதுடன், அதுவே சைவ சமயமாகப் பிற் காலத்தில் வழங்கப்பட்டது என்பது சைவ சமயப் பெருமக்களின் நம்பிக்கை.

''சித்தாந்த நூல்களுள் சிறப்பாகக் கொண்டு பயிலப் படும் திருக்குறள் உரையுடன் முழுவதும் பன்முறை பாடஞ் சொல்லப் பட்டது.''

சிந்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப் பிள்ளை
சிவஞான சித்தியார் ஆராய்ச்சி — ஆசிரியர் வரலாறு.

''வள்ளுவர் வாய்மொழி சைவ சித்தாந்தத்திற்கு அரண் செய்வதும் (சிவஞான சித்தியார் ஆராய்ச்சி) இந் நூலின் கொள்கையாகும்.

— ம. பாலசுப்பிரமணியன் — தலைவர் சைவசித்தாந்த மகாசமாசம்.

அணிந்துரை—சிவஞான சித்தியார் ஆராய்ச்சி.

"தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனர் கொண்ட ஒரு முழு முதற் கொள்கையே தமிழ் மக்கட்கு உரிய தொன்ருகலின் அதுவே 'சைவ சமயம்' என்றும் பெயராற் பிற்காலத்து வழ்ங்கப்பட்டு வந்தது."

—மறைமலையடிகள் — மாணிக்கவாசகர் காலம்
பக் : 284

மேலே காணப்படும் சைவப் பெருமக்களின் நம்பிக்கைக்கும், சைவப் பெருமக்கள் தற்போது புலால் மறுத்தலே பற்றிக் கூறிவரும் கொள்கைகளுக்கும், சைவ சமயத் தலைவரான தவத்திரு அடிகளாரின் கருத்துக்கும் சில அடிப்படை முரண்பாடுகள் தோன்றுகின்றன. ஆயினும், வரலாற்று அடிப்படையில் கூர்ந்து நோக்குகிறவர்களுக்கு அவை முரண்பாடுகளாகத் தோன்ருமல் வரலாற்றில் ஏற்பட்ட வளர்ச்சியாகத் தோன்றும் என்பதில் ஐயத்திற்கிடம் இல்லை. அவ்வகையில் வரலாற்றில் ஏற்பட்ட வளர்ச்சியை அறிந்தே அடிகளார் அவர்களும், தமக்குத் தோன்றிய கருத்தை ஒளிவு மறைவு இன்றி வெளிப்படுத்தியுள்ளார்கள் என நாம் முழுவதுமாக நம்பலாம்.

அடிகளார் கூறும் துறவியைப்பற்றிய கருத்து வள்ளுவத்திற் குரியது தான? வள்ளுவரைக் கேட்போம். இல்லறத்தினின்றும் மாறுபட்ட துறவி மேற்கொள்ளும் தவத்தின் இலக்கணம் என்ன? வள்ளுவர் கூறுவது இது:

"உற்ற நோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு." 261

"தவத்தின் வடிவு உண்டி சுருங்கல் முதலிய வற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்தலும் தாம் பிற உயிர்கட்குத் துன்பஞ் செய்யாமையுமாகிய அவ்வளவிற்று." இது மேற்குறித்த குறளுக்குப் பரிமேலழகர் கூறும் விளக்கம்.

தவம் என்றால் என்ன? பரிமேலழகர் கொடுக்கும் விளக்கத்தை நோக்குவோம்.

"அஃதாவது மனம் பொறி வழிபோகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும் கோடைக்கண் வெயிலில் நிலை நிற்றலும், மாரியிலும் நீர் நிலையில் நிற்றலும் முதலிய செயல்களை மேற் கொண்டு அவற்றால் தம் உயிருக்கு வரும் துன்பங் களைப் பொறுத்துப் பிற உயிர்களை ஓம்புதல். புலால் மறுத்து உயிர்கள் மேல் அருள் முதிர்ந்துழிச் செய்யப் படுவதாகலின் இது புலால் மறுத்தலின் பின் வைக்கப் பட்டது"

மேலே கண்ட விளக்கத்தில் துறவி ஏன் புலால் மறுக்க வேண்டும் என்பதற்குத் தெளிவான காரணம் சுட்டப்படுகிறது.

"மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கல்" என்பது தெளிவான காரணம். அவ்வாறுசுருக்கப்படும் உண்டிகளுள் ஒன்றே புலால். உண்டியைச் சுருக்குவதன் வழியாக துறவி தன் ஊனைச் சுருக்க வேண்டும். அப்படியானால் அவன் தவத்தில் நிற்க முடியும். ஊனைச் சுருக்கு வதற்குப் பதிலாக மற்போர் செய்யப் புகும் வீரன் தன் உடலைப் பெருக்க விரும்புதலைப் போலத் துறவியும்

தன் ஊனைப் பெருக்க விரும்பினால் அவன் தவத்தில் எவ்வாறு நிலை பெற முடியும்? அவன் எவ்வாறு அருளை ஆள முடியும்? வள்ளுவர்,

''தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்.?'' 251

என்றே வினவுகிறார்.

ஆகவே, துறவி ஏன் புலால் உண்ணக் கூடாது?

அது அவன் தவத்திற்கு இடையூற்றை ஏற்படுத்தும். ஊன் சுருக்குவதே தவம். ''மனம் பொறி வழி போகாது நிற்றற் பொருட்டு உண்டி சுருங்கலே தவம். புலாலுண்டால் மனம் என்ன ஆகும்? அது நல்லதை நினைக்காமல் பொறி வழிச் சென்று தீமையை நினைக்கும் அன்றோ?

''படை கொண்டார் நெஞ்சம் போல் நன்றூக்காதொன்றன்
உடல் சுவை உண்டார் மனம்.'' —253

கொலை செய்யும்படி படை கொண்டார் மனம் கொலையையே நாடும். தவத்திற்கு அவமாக உடல் பெருக ஊனுண்டார் மனம் அவத்தையே நாடும். அப்படிப் பட்டவர்கள் துறவியாக நிலைபெறல் முடியாது. துறவறத்தில் நிலைநிற்க முடியாதவர்களிடத்தில் அருளாட்சியும் நிலைநிற்காது.

எவ்வாறு பொருளைப் பெற்ற ஒருவன் அதைப் பேணிப் பாதுகாவா விடில் அவனிடத்தில் பொருளாட்சி நிலை பெறாதோ அவ்வாறே அருளை ஆளும் துறவியும், அருளைக், காத்துக் கொள்ளாவிடில் அவனிடத்தில் அருளாட்சி நிலைபெறாது.

"பொருளாட்சி போற்றுதார்க்கில்; அருளாட்சி
ஆங்கில்லை ஊன் தின்பவர்க்கு." —252

என்பது குறள் வாக்கு.

துறவறத்தைக் காத்துக் கொள்ள, மனம் பொறி வழி போகாது நிற்றல் அவசியம். அதற்கு உண்டி சுருக்கல், புலால் மறுத்தல் போல்வன துணை செய்வன வாகும்.

மனம் பொறி வழி போகாது காத்தற்கு வேண்டிய வாறு உண்டி சுருக்கல், புலால் மறுத்தல் இவற்றைக் கைக்கொள்ளாது தன் ஊன் பெருக்கத்திற்குப் பிறிது ஊனுண்ணும் துறவியின் நிலை என்னகும்? மனத்திற்கும் பொறிக்கும் எப்போதும் போராட்டம் இருக்கும். சில சமயங்களில் போராட்டத்தில் தோல்வி ஏற்படும். தோல்வியின் முடிவு—துன்பம். துன்பப் படுகுழியில் மேலும் மேலும் ஆழ்ந்து தான் எடுத்துக் கொண்ட துறவறத்தில் நிற்க முடியா நிலையை துறவிக்கு ஏற்படுத்தும்.

இவ்வாறு துன்பப் படுகுழியில் மேலும் மேலும் ஆழும் நிலையையே வள்ளுவர் அழகான உவமையின் வாயிலாக விளக்குகிறார். சேற்று நிலத்திலே நடந்து செல்லுதல் கடினம். அவ்வழி நடந்து செல்வது துன்பமானது. அச்சேற்று வழியாக ஒருவன் நடந்து செல்லுகிறான் என்று வைத்துக்கொள்வோம். சில இடங்களில் ஆழமான புதை சேற்றுக் குழிகள் இருக்கக்கூடும். அவை பார்ப்பதற்கு வெளியே தெரியாமல் மற்றச் சேற்று நிலம் போலவே காட்சியளிக்கும். சேற்று நிலம் வழியாக நடந்து செல்பவனுக்கு அப்

புதை சேற்றுக்குழி கண்ணுக்குத் தெரியாதாகையால் அக்குழியில் கால் வைக்கிறான். கால் உள்ளே இழுக்கப்படுகிறது. வெளியேற முயற்சி செய்கிறான்: அவன் எவ்வளவுக்கெவ்வளவு முயற்சி செய்கிறானே அவ்வளவுக்கவ்வளவு உள்ளே இழுக்கப்படுகிறான். அவன் அப்புதை சேற்றில் அகப்பட்டுத் தான் எதை நோக்கிச் செல்லப் புறப்பட்டானே அதை அடைய இயலாதபடி இடையிலேயே அகப்பட்டுக் கொள்ளுகிறான். அதிலிருந்து விடுதலை பெற இயல்வதில்லை. காரணம் அவன் வெளியே வர இயலாதபடி அவனது காலையும் உடலையும் சேறு கெட்டியாகப் பிடித்துகொள்ளுகிறது. தன் பிடியை அது விடுவதில்லை. சேறு-அளறு.

"உண்ணாமை உள்ளது உயிர் நிலை ஊன் உண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு." 255

ஆகவே, தன் ஊன் பெருக்கிற்குப்பிறிது ஊனுண்ணும் துறவியின் மனம், பொறி வழியே சேற்று நிலத்தில் சென்று புதை குழியாகிய துன்பத்தில் மாட்டிக் கொண்டு அதிலிருந்து புறப்பட்டுத் தன் துறவறத்தைத் தொடர முடியா நிலையில் அகப்பட்டுத் துன்பமடைகிறது.

சங்க இலக்கியங்களில் எங்குமே 'அளறு' என்பதற்கு 'நரகம்' என்னும் பொருள் இல்லை என்பது குறிப்பிடத் தக்கது. வள்ளுவரும் 'அளறு' என்னும் சொல்லை நரகம் என்னும் பொருளில் ஆளவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. கீழ்வரும் குறளை நோக்குக.

"வரைவிலா மாணிழையார் மென்தோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு." 919

இதில் வருகின்ற தோலே, அளறு என வள்ளுவர் கூறுவது நோக்கத் தக்கது.

கீழ்வரும் குறளைக் காண்க.

“ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான் புக்கு அழுந்தும் அளறு.” 835

இக்குறளுக்குப் பொருள் இது: “மூடனானவன் வரும் பிறவிகளிளெல்லாம் தான்புகுந்து அழுந்தும் நரகத்தை இவ்வொரு பிறப்புள்ளே செய்துகொள்வான்”. “எழுமையும் தான்புக்கு அழுந்தும் அளறு” - பரிமேலழகர் இந்த அடிக்கு, “வரும் பிறவிகளெல்லாம் தான் புக்கழுந்தும் நிரயத்தினை” என்கிறார். இவ்வுரை பொருந்தாமை நோக்கத் தக்கது.

“ஒரு கால் நரகத்திலே பிறந்தால் அவ்வுடம்பு நீங்கினாலும் அதனுள்ளே பிறத்தல்”—இது மணக்குடவர் உரை. அளறு என்பதற்கு நரகம் என்னும் பொருள் வள்ளுவர் குறளில் பொருந்தவில்லை. வள்ளுவர் நரகத்தை ‘இருள்’ எனவும் “இருள் சேர்ந்த இன்னா உலகம்” எனவுமே கூறியுள்ளார்.

மேலே நாம் கண்டவைகளிலிருந்து துறவிகளின் மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு அவர்கள் கைக் கொள்ளும் விரதங்களுள் புலால் மறுத்தலும் ஒன்று என வள்ளுவர் கூறுகிறார் என்பது தெளிவு. துறவி தன் ஊன் பெருக்கிற்குப் புலால் உண்டால் ஏற்படும் துன்ப விளைவுகளையும் வள்ளுவர் விளக்குகிறார். ஆகவே, துறவறமாகிய நோன்மைக்குரிய ஒரே சிறப்பறம் எது? அதற்கடுத்தது எது? என வள்ளுவரைக் கேட்டால்,

"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று" 323

என விடை கொடுக்கிறார்;

(பொய்யாமை-விளக்கம் 'சான்றோர்யார்'? என்னும் அந்நூலில் காண்க.)

"நோன்மையை மேற்கொண்ட துறவி, சால்பை மேற்கொண்ட சான்றோன் இவர்களை ஒப்பிட்டால் ஒவ்வொருவருக்கும் உரிய சிறப்பறம் எது?' என்னும் வினா வள்ளுவரிடம் கேட்கப்படுகிறது. இல்லறம் துறவறம் கூறும் அறத்துப்பாலைத் தாண்டிப் பொருட்பாலில் வள்ளுவர் கொடுக்கும் விடை இது.

"கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு." 984

துறவு மேற்கொண்ட பல்வகைச் சமயத் துறவிகளிலும் தலைமையானவன் அதாவது சிறந்தவன் யார்? என்னும் கேள்விக்கு

"நிலையஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை." 325

என வள்ளுவர் விடை கிடைக்கிறது.

தவத்திரு குன்றக்குடி அடிகளார் கூறுவதைப் போன்று இல்லறம் துறவறங்களுக்கிடையே வள்ளுவர் கடமை வேறுபாடு கூறுகிறாரா? என்னும் ஐயத்திற்கு இப்போது ஓரளவு நமக்குத் தெளிவு பிறக்கிறது. இதை மேலும் நோக்குவோம்.

இல்வாழ்வான் தன் கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றுவதற்குப் பொருள் தேவை. பொருளைத் தேடிச் சேர்த்துப் பொருளுடைமையை அடைவது அவன் கடமை. அந்தப் பொருளுடைமையால் அவன் விருந்தோம்ப வேண்டும். அவ்வுடைமை கொண்டு விருந்தோம்பாவிடில் அது மடமை.

"உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு." 89

இதற்கு நேர் எதிரானது துறவியின் கடமை. துறவிக்கு இருக்க வேண்டிய இயல்பு, ஒன்றும் இன்மையாகும். உடைமை துறவிக்கு மயலாகும்.

"இயல்பாகும் நோன்பிற் கொன்று இன்மை; உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து." 344

இல்லறத்துக்குச் சிறப்பு மக்கட் பேறு; அதுவே இல்லறத்தான் அடையத்தக்க சிறந்த பேறு.

"பெறுமவற்றுள் யாம் அறிவதில்லைஅறிவறிந்த
மக்கட் பேறல்ல பிற." —61

என்பது வள்ளுவர் திருவாக்கு.

ஆனால், துறவியின் நிலையோ நேர் எதிரானது. துறவிக்கு மக்கட்பேறு என்னும் நினைப்புக்கே இடம் இல்லை. துறவியின் உடல் கூடத் துறவிக்கு மிகைப் பொருளே.

"மற்றும் தொடர்ப்பாடு எவன் கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை." 345

என்பது வள்ளுவர் கூற்று.

பிள்ளைப் பிறப்பை ஏற்படுத்துதல் இல்வாழ்வான் நிலை. பிள்ளைப் பிறப்பை அறுத்தல் துறவியின் நிலை. ஆகவே, இல்லறத்தார்க்குரிய கடமைகளும் துறவறத் தார்க்குரிய கடமைகளும் தெளிவாக மாறுபடுகின்றன. அவரவர் கடமைகளை அவரவர் அந்தந்த நிலை நின்று செயல் படுத்த வேண்டும். ஆகவே, தவத்திரு குன்றக் குடி அடிகளார் கூற்று வள்ளுவர் வழி அமைந்ததே என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

"இல்லறத்தில் இருப்பவர்களுக்கு நல்ல மனைவி அமைவது மிக அவசியம். அவர்கள் சேர்ந்து செல் வத்தை ஈட்டிப் பாதுகாத்து விருந்தினரை ஓம்பிப் தென்புலத்தார், தெய்வம், ஒக்கல் முதலியவர்களுக்குத் தாம் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து, நற்புதல் வர்களைப் பெற்றெடுத்துச் சிறப்பாக அவர்கள் வாழத் தக்க முறைகளை வகுத்து அனைவருக்கும் பயன்தரத்தக்க வாழ்க்கை வாழ்வதே இல்லறத்தின் லட்சிய மெனச் சொல்லப்பட்டது. ஆனால், சிறப்பாகத் துறவிகளுக் கென்று அமைந்த விதிகள் வேறு. அவர்கள் யாவரிடமும் அருள் உடையவர்களாக இருத்தல் வேண்டும். அவர்கள் புலாலை மறுத்துக் கொல் லாமையை மேற்கொள்ள வேண்டும்.

"தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான் பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை."

அவர்கள் வாய்மையுடையவர்களாகவும் இருக்க வேண்டும். ஆனால் இவை இரண்டுள்

"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று".

என்கிறார் வள்ளுவர்"

-திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு-பக்-116-117,

ஆகவே, திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு வாயிலாக வெளிவரும் வள்ளுவரின் கொள்கை,

"சிறப்பாகத் துறவிகளுக்கென்று அமைந்த விதிகள் வேறு. அவர்கள் யாவரிடமும் அருள் உடையவர்களாக இருத்தல் வேண்டும். அவர்கள் புலாலை மறுத்து, கொல்லாமையை மேற்கொள்ள வேண்டும்" என்பதாகும்.

மேலே கண்ட 1. அருள், 2. புலால் மறுத்தல், 3. கொல்லாமை ஆகிய மூன்றையும் இணைத்துக் கூறும் குறட்பா இது:

"அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்." —254.

துறவிகளுக்குக் கூறப்பட்ட சிறப்பறம் மூன்றனுள் புலால் மறுத்தல், கொல்லாமை ஆகிய இரண்டும் நமக்கு எளிதாகப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனல், 'அருள் என்பது என்ன? அது எதைக் குறிக்கிறது? அதன் விளக்கம் என்ன?' என்பன புரிவதற்குச் சற்றுக் கடினமாக இருக்கின்றன. அவற்றை இனி நோக்குவோம்.

# 7. அருள் என்பது யாது?

கொல்லாமை, புலால் மறுத்தல் ஆகிய இரண்டும் வெளிப்படையான செயல்களைச் செய்யாதிருத்தல். புலால் மறுத்தல் கொல்லாமையுள் அடங்கும். ஆகவே, புலால் மறுத்தல் கொல்லாமை அருளுடைமை ஆகிய மூன்றையும் கொல்லாமை, அருளுடைமை ஆகிய இரண்டினுள் அடக்கலாம். இந்த இரண்டையும் வள்ளுவர் இரண்டு விதங்களில் விளக்குகிறார். துறவிகளுக்கு இருக்க வேண்டிய அடிப்படை அருளுடைமை. அருளுடைமையே துறவற இயலின் முதல் அதிகாரம். துறவறமே அருளுடைமையில் தொடங்குகிறது. துறவிகளுக்குச் சிறப்பு, கொல்லாமை யாகும்.

> "நிலையஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலை அஞ்சிக்
> கொல்லாமை சூழ்வான் தலை."

என்பது வள்ளுவர் வாக்கு

அருளுடைமை, கொல்லாமை ஆகிய இரண்டில் 'கொல்லாமை' என்னும் சொல் வள்ளுவரால் ஆறு இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆனால், 'அருளுடைமை' என்னும் தொடர் வள்ளுவரால் எங்குமே பயன்படுத்தப்படவில்லை. 'அருள்' 'அருட் செல்வம்' அருளற்றார், அருளாள்வார், அருளாட்சி என்பனவே வள்ளுவரால் பயன் படுத்தப்பட்டுள்ளன.

ஆயினும், இத்தொடர்கள் யாவற்றிற்கும் 'அருள்' என்னும் சொல்லையே அடிப்படையாகக் கொள்ளுகிறார் வள்ளுவர்.

அருள், கொல்லாமை ஆகிய இரண்டும் துறவிகளுக்குச் சிறப்பாகச் சொல்லப்படுகின்றன. 'கொல்லாமை' என்றால் பொருள் எளிதில் விளங்குகிறது. உயிர்களைக் கொலை செய்யாதிருத்தல் என்பது பொருள். அருள் என்றால் பொருள் என்ன?

அருள், கொல்லாமை, ஊனுண்ணாமை ஆகிய மூன்றையும் இணைக்கும் குறட்பாவின் வாயிலாக இக் கேள்விக்கும் விடை கொடுக்கிறார் வான்புகழ் வள்ளுவர்.

அருளாவது யாது?

அருளல்லாமை யாவது யாது?

கட்டளையிடப்பட்ட சரியான நெறி எது?

கட்டளையிடப்படாத சரியல்லாத நெறி எது?

"அருளல்லது யாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல்—254.

என்பது விடை கொடுக்கும் குறளாகும்.

"அருளாவதும், அருளல்லாமையும் யாவை எனில், கொல்லாமையே அருள்; அருள் அல்லாமையே கொலை. உபதேசம், உபதேசம் இல்லாமை யாவை எனினில், உபதேச நெறியே புலால் மறுத்தல். உபதேச நெறி அல்லாமை புலாலுண்டல் என்றவாறு"—பரிதியார் உரை.

உபதேச நெறியே புலால் மறுத்தல்.

புலால் மறுத்தலே கொல்லாமை.

கொல்லாமையே அருள்.

ஆகவே உபதேச நெறியே அருள்.,

அருளே கொல்லாமை.

கொல்லாமையே புலால் மறுத்தல்.

எனவே, புலால் மறுத்தல், கொல்லாமை, அருள் ஆகிய மூன்றும் ஒரு நெறி, அதாவது உபதேச நெறி. வள்ளுவர் காட்டும் உபதேச நெறி எது? அதுவே பொறிவாயில் ஐந்தவித்தான் காட்டிய பொய்தீர் ஒழுக்க நெறி; நீடுவாழ்வைக் கொடுக்கும் நெறி.

> "பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
> நெறிநின்றார் நீடுவாழ் வார்."—6.

ஆகவே, ஐந்தவித்தானாகிய கடவுள், மக்கள் நீடு வாழ்வை அடையும் படியாக ஒரு பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டியுள்ளார். அதுவே நல்லாறு. ஏன்? அதுவே கொல்லாமை சூழும் நெறி.

> "நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
> கொல்லாமை சூழும் நெறி."—324.

அக் கொல்லாமை சூழும் நெறியைக் காத்துக் கொள்ளும் துறவி எவனோ அவனே துறவிகள் யாவரிலும் சிறந்தவன்.

> "நிலையஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலையஞ்சிக்
> கொல்லாமை சூழ்வான் தலை."—325.

ஏன் அவன் தலைமையானவண்? அவன் சூழும் அக்கொல்லா நெறியே சிறந்த நெறி. அதைவிடச் சிறந்த நெறியாகிய ஆறு வேறு எதுவுமே இல்லை. எத்தனை விதமான சமயமாகிய ஆறுகளை எடுத்து நீ ஒப்பிட்டுப் பார்த்த போதிலும், எந்த விதமாக நீ ஒப்பிட்டுப் பார்த்த போதிலும், அதாவது கொலை நெறிச் சமயம், கொல்லா நெறிச் சமயம் ஆகிய ஒன்றை யொன்று ஒவ்வாத சமய நெறிகள் எல்லா வற்றையும் அளவைகளாற்ருனும் பொருந்துமாற் ருனும் எவ்வாறு ஒப்பிட்டுப் பார்த்தாலும் கொல்லா நெறியாகிய அருள் நெறியே சிறந்தது; அதுவே துணை. அதைத் தவிர வேறு வழி இல்லை.

"நல்லாற்ருன் நாடி அருளாள்க பல்லாற்ருன்
தேரினும் அஃதே துணை"

"அளவைகளானும் பொருந்து மாற்ருனும் நன்ருன நெறியிலே நின்று நமக்குத் துணையாம் அறம் யாதென்று ஆராய்ந்து அருளாள்க. ஒன்றையொன்று ஒவ்வாத சமய நெறிகள் எல்லாவற்ருனும் ஆராய்ந்தாலும் துணையாவது அவ்வருளே, பிறிதில்லை" —பரிமேலழகர்

"If thou examine the teachings of other faiths also thou wilt see that 'Arul' is the only Salvation." V. V. S. Salvation என்பதையே கிறித்தவர்கள் இரட்சிப்பு அதாவது மீட்பு எனக்கூறுகிருர்கள். ஏன் அது அவ் வளவு சிறப்பான துணை.?

"அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கில்லை இருள்சேர்ந்த
இன்னு உலகம் புகல்" —243

அருள் சேர்ந்த நெஞ்சுக்கு இருள் சேர்ந்த இன்னு உலகம் இல்லை.

"அருளைப் பொருந்தின நெஞ்சினையுடையவர்களுக்கு
இருளைப் பொருந்தின நரகலோகம் புகுதல் இல்லை"
—மணக்குடவர்

ஆகவே, அருள் பொருந்திய நெஞ்சுக்கு நீடு வாழ்வு நிச்சயமே.

"பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார் நீடுவாழ்வார்"

அருளைப் பெறாத நெஞ்சுடைய மற்றவர்களுக்கு அந்த நீடு வாழ்வு கிடையாது. ஏன் ?

"பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்
அற்றார் மற்றாதல் அரிது" —248

எனக் கூறுகிறார் வள்ளுவர். இதற்கு விளக்கம் கொடுக்குங்கால் பரிமேலழகர் பின் வருமாறு கூறுகிறார்:

"அருள் அற்றார் அற்றார் மற்று ஆதல் அரிது.="
=
"அவ்வாறன்றி அருளிலாதார் பாவம் அறுமையின்
அழிந்தாரே ; பின் ஒருகாலத்தும் ஆதல் இல்லை."

பரிமேலழகர் கூற்று இது. இது ஆழ்ந்து நோக்கத் தக்கது. இங்கே அவர் இரண்டு குறிப்புகள் கொடுக்கிறார்.

1. அருளற்றார் பாவம் அறுபடாது.

2. பின் ஒரு காலத்தும் அழிவு நீங்குதல் இல்லை. ஆகவே, மனிதர்களின் பாவத்தை அறுப்பது அருள் எனக் கூறுகிறார் பரிமேலழகர். இதற்குக் குறிப்புரை வரைந்த வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார்

கூறுவது:—

"அருளில்லாதவர்களோ, பாவம் தொலையாமல், அழிந்து நரகத்திலே போகிறதல்லாமல் பின்னையொரு காலத்தும் பாவம் போய்ப் புண்ணியவான்களாகிறதில்லை என்றவாறு."

பாவத்தை அறுப்பது—பாவத்தை தொலைப்பது அல்லது பாவத்தை நீக்குவது அருள் என்பது தெளிவாகிறது. இப் 'பாவம்' என்னும் சொல்லை வள்ளுவர் எங்கேனும் ஆண்டுள்ளாரா? ஆம்! ஒரே ஓரிடத்தில் 'பிறனில் விழையாமை' அதிகாரத்தில் ஆண்டுள்ளார்.

" பகை பாவம் அச்சம் பழி என நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்." —146

இங்கே வள்ளுவர் கூறும் பாவம் என்பதற்குப் 'பாவம்' என்றே பொருள் கூறுகின்றார்கள் உரையாசிரியர்கள். ஆங்கிலத்திலே மொழி பெயர்த்த M. S. P. அவர்கள் **Sin** எனக் கூறுகிறார்.

" Enmity, **Sin**, fear, and Infamy-these four will never leave the lusty adulterer."

G. வான்மீகநாதன் அவர்களும் அவ்வாறே கூறுகிறார்.

" Hatred, **Sin**, fear, and Infamy-these four will never leave him who seduces another's wife."

'Sin' என்றும் ஆங்கிலச்சொல் இரண்டு விதத்தில் ஒருவனிடம் சேரும் பாவத்தைக் குறிக்கும்படி பயன்படுகிறது.

1. மனிதன் தானே செய்யும் பாவம். அது அறத்திற்கு மாறான செயல்களைக் குறிக்கிறது. அவைகளைக் கடலுக் கொப்பிட்டால் அறஅழிக்குமாறான பிறஅழி (Individual Sin)

2. அவனது பிறவியிலேயே தந்தை, பாட்டன், பூட்டன் முன்னோர் வழியாகப் பிறவிப் பெருங்கடலாக அவனைப்பிணிப்பது (Original Sin).

"இவை இரண்டும் இருளில் சேர்க்கும் இருவினையாகும் Sin என்னும் ஆங்கிலச்சொல் "இருள்சேர் இருவினை' என்னும் பொருளை உள்ளடக்கியது.

('இருள்சேர் இருவினை' விளக்கம் 'ஐந்துவித்தான் யார்?' என்னும் நூலில் காண்க.)

மேலே கண்டவைகளைத் தொகுத்துப் பார்த்தால்
உபதேச நெறியே புலால் மறுத்தல்.
புலால் மறுத்தலே கொல்லாமை.
கொல்லாமையே அருள்.
Arul is the only Salvation.
பல்லாற்ருல் தேரினும் அருளே துணை.

காரணம்:-அருள் சேர்ந்த நெஞ்சினர்க்கு இருள் சேர்ந்த இன்னு உலகம் இல்லை.

எப்படிப்பாவத்தை அறுப்பது அருள்.? பாவமே இருள் சேர் இருவினை.

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு."

ஆகவே, இறைவன், அருளால் பாவத்தை அறுத்து இருளிலிருந்து விடுவிக்கின்ருன்.

"அவ்வாறன்றி அருளிலாதார் பாவம் அருமையின் அழிந்தாரே; பின் ஒருகாலத்தும் ஆதல் இல்லை."

—பரிமேலழகர்.

மேலே காணும் தொகுப்பை மேலும் சுருக்கினுல்,

உபதேச நெறியே புலால் மறுத்தல் கொல்லாமை, அருள் ஆகும். இறைவன், அருளால் பாவத்தை அறுத்து இருளிலிருந்து விடுவிக்கிருன். மேலே காணும் புலால் மறுத்தலும் கொல்லாமையும் துறவறத்

திற்கே உரிய சிறப்பறமாகக் கருதப்படுகின்றன; உபதேச நெறியெனக் கூறப்படுகின்றன. அப்படியானால் இதன் பொருள் என்ன? ஆழ்ந்து நோக்கினால் வள்ளுவர் துறவற இயலில் கூறும் புலால் மறுத்தலும், கொல்லாமையும் பொதுவானவை அல்ல என்றும், அவை இரண்டும் சிறப்பானவை என்றும் துறவிகளுக்கே உரியவை என்றும் புலனாகும்.

பொதுவாக உலக மக்கள் யாவருமே தங்கள் உணவுக்காக, ஓரறிவு முதல் ஐயறிவு ஈருகவுள்ள உயிர்களைக் கொல்லுகின்றார்கள்; ஊனை உண்ணுகின்றார்கள். இது பொது நிலை. கொலையும் ஊனுண்ணலும் அல்லது கொல்லாமையும், புலால் மறுத்தலும் அந்தந்த மக்களின் விருப்பப்படி செயல்படுகின்றன. இது பொது வாழ்வு; பொதுவறம்; இல்லறம்.

பொது அறமாகிய இல்லறத்திலிருந்து சிறப்பறமாகிய துறவறம் எப்பொழுது தோன்றுகிறது? குறிப்பிட்ட ஒரு நெறியை அமைத்து அதற்கென வாழ வேண்டும் என்றும், அவ்வழியே வாழ வேண்டும் என்றும் கூறும் பொழுது, அக்குறிப்பிட்ட நெறியைப் பொது அறமாகிய இல்லறத்தார்க்கு எடுத்துக்கூறி, அந்நெறியை மற்றவர்களுக்கு வற்புறுத்தும் நிலையில் தனித்து வாழும் பொழுதே சிறப்பறமாகிய துறவறம் தோன்றுகிறது. ஆகவே, துறவறம் குறிப்பிட்ட ஒரு நெறியை வற்புறுத்தும் வண்ணம் உருவாவது. அச்சிறப்பு அறம், தனி ஆன்ம ஈடேற்றம் கருதியும் அமையலாம்; சமுதாய ஈடேற்றம் கருதியும் அமையலாம். எப்படி அமைந்த போதிலும், துறவறம் ஒரு சிறப்பு நெறியின் அடிப்படையில் அமைவது என்பதில்

ஐயம் இல்லை. ஆகவே, இல்லறத்தார்க்குரிய பொதுக்கடமைகளிலிருந்து மாறுபட்டுச் சிறப்புக் கடமைகளை ஏற்றுக் கொண்டவர்களே துறவிகள்.

சிறப்புக் கடமைகளை ஏற்றுக் கொண்ட துறவிகளிடையே பல்வேறு நெறிகள் உள்ளன. அந்தந்த நெறிகளின் அடிப்படையில் அந்தந்தத் துறவிகள் வேறுபடுகிறார்கள்.

வைதிகத் துறவிகளின் நெறி வேறு,
சமணத் துறவிகளின் நெறி வேறு,
பௌத்தத் துறவிகளின் நெறி வேறு,
கிறித்தவத் துறவிகளின் நெறி வேறு.

ஆகவே, அந்தந்த நெறி சார்ந்த துறவிகள் அந்தந்த நெறியை வற்புறுத்துவார்கள். மேலே காணும் நான்கு வகைத் துறவிகளை அவர்கள் சார்ந்துள்ள நெறியின் அடிப்படையில் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. கொலை சூழும் நெறித்துறவிகள்.
2. கொல்லாமை சூழும் நெறித்துறவிகள்

சமயத்தின் பெயரால் கொன்றேயாக வேண்டும் என வற்புறுத்தும் துறவிகளே கொலை சூழும் நெறித் துறவிகள். சமயத்தின் பெயரால் கொல்லக் கூடாது என வற்புறுத்தும் துறவிகளே கொல்லாமை சூழும் நெறித்துறவிகள். கொலை நெறித் துறவிகள் யார்? நாம் மேலே கண்ட நான்கு வகைத் துறவியர்களுள் கொலை நெறித் துறவிகள் வைதிக சமயத் துறவிகளே. கொல்லாமை சூழும் நெறித்

துறவிகள் 1. சமண சமயத் துறவிகள் 2. பௌத்த சமயத் துறவிகள் 3. கிறித்தவ சமயத் துறவிகள் ஆவர். இம்மூன்று சமயங்களும், சமயத்தின் பெயரால் நடைபெறும் கொலையையும் புலால் உண்ணுதலையும் கண்டிக்கின்றன; மூவகை நெறி நின்று கண்டிக்கின்றன. இவை மூன்றும் ஓரணியில் நின்று கொலை நெறியைக் கண்டிக்கும் பொழுது அக்கூற்றே தவறு என வைதிகம் பறை சாற்றுகிறது. எவ்வாறு? "வேள்வியில் உயிர்களைக் கொன்றேயாக வேண்டும், கொன்றதன் ஊனை உண்டேயாக வேண்டும்" என வைதிக நெறியாளர் வற்புறுத்துவதுடன், கொல்லப் படுகின்ற உயிர்களின் மீது பொதுமக்களுக்கு ஏற்படும் இரக்க உணர்வை நீக்கும் பொருட்டு, அவ்வுயிர்களும் வேள்வியால் கொல்லப்படுவதால் நன்மையே அடைகின்றன எனக் கற்பித்துக் கொண்டு, மக்களுக்குக் கூறுகின்றனர் எனத் திருக்குறள் பீடம் அழகரடிகள் கூறுகிறார்.

அது வருமாறு:–

"வேள்வி முதலிய சடங்குகளில் உயிர்களைக் கொன்று வதைத்துத் தின்றால் அதனால் அவ்வுயிர்கள் நன்மையே அடைகின்றன என்றும் சிலர் அறியாமையால் கற்பித்துக் கொள்ளுகின்றனர்." —திருக்குறள் அறம் பக்: 159

ஆகவே, இவ்வளவு ஆழமாகவும் வேகமாகவும் செயல்பட்ட கொலை நெறித் துறவிகள் எதிர்த்த சமண பௌத்த கிறித்தவத் துறவிகள் இரண்டு அணியில் பிரிந்து செயல் பட்டதை முன்னமே விரிவாகப் பார்த்துள்ளோம். நாத்திக வாதத்தில் சமண பௌத்தத் துறவிகள் கொல்லாமை சூழும் நெறியை அறிவுறுத்தினர்கள். ஆத்திக வாதத்தில் கொல்லாமை சூழும்

நெறியை அறிவுறுத்தியவர்கள் கிறித்தவத் துறவிகளே. ஆகவே, வள்ளுவர் கூறும் முறையில் ஆத்திக வாதத்தின் அடிப்படையில் கடவுளை ஏற்றுக் கொண்டு,

"உபதேச நெறியே புலால் மறுத்தல் கொல்லாமை அருள் ஆவது. இறைவன், அருளால் பாவத்தை அறுத்து இருளிலிருந்து விடுவிக்கிருன்."

எனக் கூறக் கூடிய உபதேச நெறியையுடைய துறவிகள் யார்? கிறித்தவத் துறவிகளே என நாம் விடை கூறவேண்டிய நிலையில் இருந்த போதிலும் இதை மேலும் ஆய்வோம்.

அருள் என்றல் என்ன?

அருளுக்கும் கொல்லாமைக்கும் உள்ள தொடர்பு என்ன?

அருளுக்கும் கடவுளுக்கும் உள்ள உறவு என்ன? இவற்றை நோக்குவோம்.

அருள் என்றல் என்ன?

"அருள் யாதெனில் கொல்லாமை;"
"அல்லது யாதெனில் கோறல்;"
"பொருளல்லது அவ்வூன் தினல்."

எவ்வூன் தினல் பொருளல்லது? எவ்வூனை உண்ணுமை நன்று?

"அவிசொரிந்து ஆயிரம்வேட்டலின் ஒன்றன்
உயிர் செகுத்து உண்ணுமை நன்று."

அப்படியானல் வேள்வியில் கொலை செய்வதும் கொன்றதை உண்பதும் நல்ல ஆறு இல்லையா? இல்லையெனில் நல்லாறு எனப்படுவது யாது? —

"நல்லாறெனப் படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி"

நல்லாறே கொல்லாமை சூழும் நெறியெனில் கொலை நெறியின் தன்மை என்ன? வேள்வியில் கொலை செய்வதை மறுத்துக் கூறும் நெறியின் தன்மை என்ன? இவ்விரு நெறி சார்ந்த துறவிகளின் தன்மை என்ன?

"நிலையஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை" 325

கொல்லாமை சூழ்வான் கூறும் அருள் நிறைந்த கொல்லாமை சூழும் நெறியே நல்லாறு எனில், கொலையில்லாத அந்த ஆறுதான் சிறந்த ஆறுமா? அருள் நிறைந்த ஆறே ஒருவனுக்குச் சிறந்த துணையாகுமா?

"நல்லாற்றான் நாடி அருளாள்க பல்லாற்றான்
தேரினும் அஃதே துணை." 242

எவ்வாறு அது நல்ல துணையாகும்?

"அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்." 243

அருள் சேராத நெஞ்சினையுடையவர் நிலை என்ன ஆகும்?

"அருள் அற்றார் அற்றார் மற்று ஆதல் அரிது"

அருள் அற்றார் ஏன் அற்றார்? ஏன் மற்று ஆதல் அரிது?

"அருளிலாதார் பாவம் அருமையின் அழிந்தாரே;
பின் ஒருகாலத்தும் ஆதல் இல்லை"
248பரிமேலழகர் உரை

அருள் பாவத்தை அறுப்பது எவ்வாறு? அருளின் தோற்றம் எங்கே?

"அருளென்னும் அன்பு ஈன் குழவி" 757

அருள் அன்பிலிருந்து பிறக்கிறது என்றால் அன்பின் தன்மை என்ன ?

"மறத்திற்கும் அன்பே துணை." 76

அன்பு துணையாய் இருக்கும் மறம் யாது?

"அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு" 72

என்பையும் பிறர்க்காகக் கொடுப்பதே அன்பு. அவ்வன்பிலிருந்து தோன்றுவதேஅருள். அவ்வருளே பாவத்தை அறுப்பது. அப்படி என்றால் பாவத்தை அறுக்கும் அருளைத் தோற்றுவிக்கும் பொருட்டுத் தனது என்பையும் ஈதலாகிய மறச்செயலின் மூலம் அன்பை வெளிக்காட்டி, அருளைப் பிறப்பித்துப் பாவத்தை அறுத்து, அழிவிலிருந்து விடுவித்து, நீடு வாழ்வை நிலை நாட்டியவன் யார் ?

"பொறிவாயில் ஐந்தவித்தான்" 6

அவ்வைந்தவித்தான் என்பையும் ஈதலாகிய மறச்செயலின் மூலம் அன்பை வெளிக்காட்டி, அருளைப் பிறப்பித்துப் பாவத்தை அறுத்து, அழிவிலிருந்து விடுவித்து, நீடு வாழ்வை நிலை நாட்டியவனால், அவன் நெறி கொல்லாமை சூழும் நெறியாகிய பொய்தீர் ஒழுக்க நெறியாகுமா ? அவன் நெறி நின்றார் நீடுவாழ்வடைவார்களா ?

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.'

பொய்தீர் ஒழுக்க நெறியே ஐந்தவித்தான் நெறி. அதுவே வேள்வியில் கொலையை மறுத்தலாகிய கொல்லாமை சூழும் நெறி. அதுவே அருள் நெறி. வேள்வியில் உயிர்க்கொலை செய்யும் நெறியோ அருளற்ற நெறி.

"அருளல்லது யாதெனின் கொல்லாமை கோறல்."

வேள்வியில் உயிர்க்கொலையை மறுத்தலாகிய கொல்லாமை சூழும் நெறியாம் அருள் நெறியை உள்ளத்தே கொண்டவர் நிலை என்ன ?

"அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்."

அந்த இருள் சேர்ந்த இன்னா உலகம் புகாதவாறு அருளின் வழியாக இருள்சேர் இருவினையாகிய பாவத்தை அறுப்பவன் யார்? யார் மாட்டுள்ள பாவம் அறுக்கப்படுகிறது?

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு."

இறைவன் புகழைச் சிந்திப்பது, கூறுவது, செய்வது எதற்கு?

நமது பாவத்தை நீக்குவதற்கே—அறுப்பதற்கே செய்வதாகும். ஆகவே, இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டுள்ள பாவம் அறுக்கப்படுகிறது. பாவத்தை அறுப்பது இறைவனின் அருள். அருள் இல்லாதவர்கள் பாவம் அறாமையின் அவர்கள் அழிந்தாரே ஆவார்கள்.

ஆகவே, இறைவனின் அருள் சேர்ந்த நெஞ்சினர் இருள் சேர் இருவினையிலிருந்தும் விடுபடுவதால், அவர்களுக்கு இருள் சேர்ந்த இன்னா உலகம் இல்லை.

"அருள் சேர்ந்த நெஞ்சினர்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்."

ஆகவே, இதுவரை கண்ட அருள் என்பது இறைவனின் அருளே.

இருள்சேர் இருவினையை அறுப்பது அவ்வருளே;
அவ்வருள் நெறியே பொய்தீர் ஒழுக்க நெறி;

அப்பொய்தீர் ஒழுக்க நெறியே வேள்வியில் கொல்லாமை சூழும் நெறி;

அக்கொல்லாமை சூழும் நெறியே நல்லாறு;
அந்நல்லாறே அருள் நெறி;

அவ்வருள் நெறியே பல்லாற்றுல் தேரினும் துணையாவது.

ஆகவே, அருள் நெறி எது? வேள்வியில் உயிர்களைக் கொல்லாமையும், கொன்ற அவ்வூனை உண்ணுமையுமாகிய நெறியே அருள்நெறி. அருள் அல்லாத நெறியாது என்ருல், கொல்லா நெறியை அழித்து, வேள்வியில் உயிர்களைக் கொல்லுவதும், வேள்வியில் கொன்ற பொருளற்ற அவ்வூனை அவிப்பாகமாகப் பெற்று உண்பதுமாகிய நெறியேயாகும்.

"அருளல்லது யாதனில் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல்."

ஆகவே, அக் கொலை நெறியிலிருந்து விடுபட்டு, வேள்வியில் கொல்லாமை சூழும் நெறியாகிய பொறி வாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி நின்று, இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு இருள்சேர் இருவினையும் சேரா. காரணம், நெறிநின்று இறைவன் பொருள் சேர் புகழ் புரிந் தாரே நெஞ்சில் அருள் சேர்ந்தவராவார். அருளு டையார் பாவம் அறுபட்டமையின், அருள் சேர்ந்த நெஞ்சினர்க்கில்லை இருள் சேர்ந்த இன்னா உலகம் புகல்.

# 8. அருளின் தோற்றம் எங்கே ?

அருளுக்கும், பொருள்சேர்புகழ், பொய்தீர் ஒழுக்க நெறி இவற்றுக்கும் உள்ள தொடர்பு என்ன? இத் தொடர்பை விளக்கும் பன்மொழிப் புலவரவர்களின் கூற்றினை நோக்குவோம்.

“கடவுள் மெய்ம்மையே வடிவானவர். ஆனால், அவர் அருவப் படிவினர், இயங்காப் பொருள். ஆனால், திருவடியாகிய ஆதிபகவனே கடவுளின் உருவப் படிவம், அவரது மெய்ம்மை வடிவைத் தம் பண்பாக உடையவர். அத்துடன் அவரே கடவுளின் அருளுருவினர், கடவுளின் பண்பு வடிவானவர். கடவுளின் மெய்ம்மையையும் பண்புருவையும் அருள் காரணமாக உலகுக்கு வேதமாகத் தந்தருளுபவரும் அவரே யாவர். அவர் “பொருள் சேர் புகழ்” என்று குறிக்கப் பட்டதன் காரணம் இதுவே” —மணிவிளக்கவுரை I பக். 301.

“ஆதிபகவனே, ‘பொறிவாயில் ஐந்தவித்தான்’ என்ற அடை மொழி மூலம் பண்புருவினராகக் குறிக்கப்பட்டார்.”

—ம. வி. I பக். 317.

“கடவுளின் திருவடியே இவ்விரு குறட்பாக்களிலும் முறையே ‘பொருள்சேர் புகழ்’ என்றும், ‘பொய்தீர் ஒழுக்க நெறி என்றும் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன.”

—ம. வி. I பக். 300—301.

மேலே காணும் பகுதி நமக்கு விளக்கும் கருத்து என்ன ?

“கடவுள் அருவப் பண்பினர். ஆதிபகவனாகிய பொறி வாயில் ஐந்தவித்தான் கடவுளின் உருவப் படிவம். அவரே

கடவுளின் அருளுருவினர். அவர்தாம் பொருள்சேர் புகழ் என்றும் பொய்தீர் ஒழுக்க நெறி என்றும் குறிக்கப்படுபவர்.''

" அருவப் பண்பினர் — உருவப்படிவம் — கடவுளின் அருளுருவினர்.''

ஆகவே, அருளின் தோற்றம் எங்கே? என்னும் கேள்விக்கு நமக்குக் கிடைக்கும் விடை :—

அருவப் பண்பினராகிய கடவுளின் உருவப் படிவமே அருள்.

மேலும், அழகரடிகளின் விளக்கங்களை நோக்குவோம்.

" வானத்தில் மேகங்களினூடு எதிரின்றி மிளிரும் மின்னுக் கொடி போல, உலகியலிற் பருமைகளினூடு ஊடுருவி விளையாடும் இறைவனது ஆற்றலே ' அறம் ' என்பது. தன்னியல்பில் மிக மெல்லியல்பாய்த்திகழும் அந்த வல்லமை, ' அருள் ' எனப்படும் ''

—திருக்குறள் அறம்—பக், 64.

" அருள் என்னுஞ் சொல் ' அருமையானது ' என்னுஞ் சொற்பொருளுடையது. அதன் நுட்பமும் ஆற்றலுங் கருதி அவ்வாறு சொல்லாக்கம் அமைந்தது. அருமைக்கு அருமையாகவும், எளிமைக்கு எளிமையாகவும், அமைந்த அத்திருவருள் உலகுயிர்களினிடையே விளங்கினும் எவ்வாற்றாலும் தன் அருமை குன்றாத நிலையில் எப்போதும் விளங்கிக்கொண்டிருப்பதனால், அருமைக் கருத்தில் அருள் என்றும் பெயர் அமையலாயிற்று. ''

—திருக்குறள் அறம். பக். 68.

"ஆண்டவன் எல்லா உயிர்களிடத்தும் செலுத்தும் ஆற்றலுக்குத் திருவருள் என்பது பெயர். அந்த ஆற்றல் இரக்கமுடைமை மட்டுமன்று; நீதியுடைமை முதலிய பல வல்லமைகளின் தொகுப்பு."

—தி. அறம். பக். 147.

மேலே காணும் தொகுப்பு நமக்குத் தெரிவிக்கும் கருத்து.

"உலகியல் பருமைகளினூடு, மெல்லியல்பாய்த் திகழும் இறைவனது ஆற்றலே 'அருள்.' அருமைக்கு அருமையாகவும் எளிமைக்கு எளிமையாகவும் அமைந்தது அத்திருவருள். அது இரக்கமுடைமைமட்டுமன்று; நீதியுடைமை முதலிய பல வல்லமைகளின் தொகுப்பு."

மேலே நாம் காணும் பன்மொழிப் புலவர், திருக்குறள் பீடம் அழகரடிகள் ஆகிய இருவரின் கருத்துப்படி,

"அருவப் பண்பினராகிய கடவுளின் உருவப் படிவமாகிய அருளே ஐந்தவித்தான். அத்திருவருள் இரக்கமுடைமை மட்டுமன்று; நீதியுடைமை முதலிய பல வல்லமைகளின் தொகுப்பு."

என்னும் கருத்துகள் நமக்குக் கிடைக்கின்றன. அருவப் பண்பினராகிய கடவுள், தன் அருவப் பண்பை நீத்து உருவப்படிவத்தை ஏற்றமையாலேயே அவர் நீத்தார் என வழங்கப்படுகிறுர். அதை விளக்கவே உருவப் படிவத்தை ஏற்ற ஐந்தவித்தானின் ஆற்றல் நீத்தார் பெருமையில் சான்றுடன் விளக்கப் படுகிறது:

:"ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்புளார் கோமான்
இந்திரனே சாலும் கரி."

என்றுஆற்றலோடு இணங்கி அருவ நிலையைத் துறந்தவரான நீத்தாராகிய துறவியை மூன்றும் அதிகாரத்திலும், அருவ நிலை நிற்கும் ஆண்டவனை முதல் அதிகாரத்திலும், அவர்கள் இருவர்க்கும் இடைப்பட்ட நிலையாகிய கடவுளின் சக்தியாகிய ஆற்றலை இரண்டாம் அதிகாரத்திலும் வள்ளுவர் வாழ்த்திச் சிறப்பித்துப் பெருமைப் படுத்தி, இம் மூவரின் ஆற்றலால் இயங்கும் அறத்தை நான்காம் அதிகாரத்தில் வற்புறுத்திப் பாயிரத்தை முடித்து நூலைத் தொடங்குங்கால், மீண்டும் மேலே கண்ட இயல்புடைய மூவர்க்கும் இல்வாழ்வானுக்கும் இடையேயுள்ள தொடர்பைத் தொடங்குகிறார்.

> "இல்வாழ்வான் என்பாள் இயல்புடைய மூவர்க்கும்
> நல்லாற்றின் நின்ற துணை." —41.

என்று. இயல்புடைய மூவரையும் அறத்தையும் பாயிரத்தில் கூறியுள்ள முறையைச் சைவ சமய அறிஞரான திருக்குறள் பீடம் அழகரடிகள் வாயிலாக அறிவோம்.

"கடவுள், அம்மை, நீத்தார், அறம் என்னும் நான்கும், ஆண்டவனையும். அவர் ஆற்றலையும், அந்த ஆற்றலோடு இணங்கிய துறவோரையும், அவர்கள் அறத்தையும் குறிக்கும். பாயிரம் நான்கு அதிகாரங்களில் அந்த நான்கையும் காண்கிறோம்" —திரு. அ. பக். 188.

அப்படியானால் பாயிரத்தின் இரண்டாம் அதிகாரம் மழையைக் குறிக்கவில்லையா ? கடவுளின் அருளாற்றலையே அது குறிப்பது என்பதே அழகரடிகளின் கருத்து.

"கடவுளின் அருளாற்றல் பாயிரத்தின் இரண்டாம் அதிகாரமாய் இருப்பது போல அந்த ஆற்றலோடு நெருங்குதல் என்னும் துறவு, ஞானபாகத்தின் இரண்டாம் அதிகாரமாய் நின்றது." —தி. அ. பக்: 188—189.

இதுவரை நோக்கியவைகளை முறைப்படுத்தினல்

1. அருவப் பண்பினராகிய கடவுள்
2. அருளாற்றலாகிய வான்
3. உருவப் படிவமாம் அருளாகிய நீத்தார்

என்று குறிப்பதை உணரலாம்.

இப்போது அருள் தோன்றிய விதத்தை நோக்கினல் அருவப் பண்பாகிய கடவுளிடமிருந்து வெளிப்பட்ட அருளாற்றலின் உருவப்படிவமானதே அருள். அருவப் பண்பாகிய கடவுளின் தன்மை என்ன? அருளும், அருளாற்றலும் தோன்றக் காரணமான தன்மை என்ன? அருளாகிய உருவப் படிவமாம் குழந்தை தோன்றுவதற்குக் காரணமான தன்மை என்ன? அதுவே அன்பு. எவ்வாறு?

"அருளென்னும் அன்பு ஈன் குழவி" என்பதால் அறியலாம். அன்பு என்றால் என்ன?

"அன்பு என்றாலும் தியாகம் என்றாலும் கருத்தில் ஒன்றே. 'அன்பிலார்தாம் எல்லாம் தமக்குரியார்; அன்புடைய ரென்றால் என்பும் பிறர்க்குரியார்' என்று அன்புக்குக் கூறும் திருவள்ளுவர் விளக்கத்தை இங்கு நினைவிற் பதித்தல் வேண்டும்." —தி. அறம். பக். 66.

"அன்பு செய்பவன் எவனும் கடவுளிடமிருந்து பிறந்துள்ளான். அவனே கடவுளை அறிவான். அன்பு செய்யாதவனே கடவுளை அறிவதில்லை: "ஏனெனில் அன்பே கடவுள்-"
—I அருளப்பர். 4:7.

"கிறிஸ்து நமக்காகத் தம் உயிரைக் கொடுத்தார்; இதனால், அன்பு இன்னதென்று அறிந்தோம்.

—I அருளப்பர். 3:16

"அருளுடைமை என்பது, ஆண்டவன் அருள் புரிந்து அதன் சாயலாக அன்பில் தோன்றிய குழந்தை. 'அன்பு ஈன் குழவி அருள்' என்பது பெர்ய்யாமொழி. ஈன் என்னுஞ் சொல் அதில் அச்சாணி போன்றது."

—தி. அறம். பக், 68.

அன்பிலிருந்து அருள் தோன்றுவதற்கு முன்னர் நடைபெறும் செயல் ஒன்றுண்டு. அங்கும் 'ஈன்' என்னும் சொல்லை வள்ளுவர் பயன்படுத்துகிறார். அதுவும் ஆழ்ந்து நோக்கத்தக்கது.

"அன்பு ஈனும் ஆர்வமுடைமை அது ஈனும்
நண் பெனும் நாடாச் சிறப்பு"

ஆகவே, அன்பிலிருந்து நட்புறவு ஈனப்படுகிறது. அதிலிருந்து அருள் ஈனப்படுகிறது. இங்கே மூன்று நிலைகளைக் காணுகிறோம். அருள் என்னும் குழவி அன்பிலிருந்தே பிறப்பதாயினும் அருளுக்கும் அன்புக்கும் இடையே நட்புறவு செயல்படுகிறது.

1. அன்பு
2. நட்புறவு
3. அருள்.

அன்பைத் தந்தையாகவும், அருளைக் குழந்தையாகவும் கொண்டால், நட்புறவை அன்பாகிய தந்தையையும் அருளாகிய குழந்தையையும் இணைக்கும் ஆற்றல் எனக் கொள்ளலாம்.

| | | |
|---|---|---|
| அன்பு | = | தந்தை |
| நட்புறவு | = | ஆற்றல் |
| அருள் | = | மகன் |

"அருவப் பண்பினராகிய கடவுளின் உருவப் படிவமே அருள்" என்பது பன்மொழிப் புலவரவர்களின் கருத்து.

"வானத்தின் மேகங்களினூடு எதிரின்றி மிளிரும் மின்னுக்கொடி போல, உலகியலிற் பருமைகளினூடு ஊடுருவி விளையாடும் இறைவனது ஆற்றலின் வல்லமையே அருள்"

என்பது அழகரடிகளின் கருத்து. மின்னுக்கொடி போல விளங்கும் இறைவன் ஆற்றலே பரிசுத்த ஆவி எனவும் கூறப்படுகிறது. 'வான் எது' என்னும் நூலைக் காண்க.

இதுவரை நாம் கண்ட யாவற்றையும் இணைத்து நோக்கினால்,:-

அன்பு — அருவம் — தந்தை — கடவுள்
நட்புறவு—மின்னுக்கொடி—பரிசுத்தஆவி— வான்
அருள் — உருவம் — மகன் — நீத்தார்

என்று இவ்வாறு காணலாம்.

ஆகவே, அருவமாகிய கடவுளின் தன்மை தந்தையாகிய அன்பு. உருவமாகிய நீத்தாரின் தன்மை மகனாகிய அருள். மின்னுக்கொடியாகிய வானின் தன்மை பரிசுத்த ஆவியாகிய நட்புறவு. இது வள்ளுவரின் கடவுள் கொள்கை.

திருவள்ளுவர் கூறும் இக்கொள்கையும் கிறித்தவர்களுடைய கொள்கையும் ஒன்றாகவே உள்ளன. கிறித்தவர்களும், அன்பைத் தந்தையாகிய அருவக்

கடவுளாகவும், அருளை மகனாக வந்த கிறித்துவாகவும், நட்புறவை மின்னுக் கொடியாகிய பரிசுத்த ஆவியாகவும் கொள்ளுகின்றனர்.

"கடவுளின் அன்பும்,
கிறித்துவின் அருளும்
பரிசுத்தாவின் நட்புறவும்
உங்கள் அனைவரோடும் இருப்பதாக."
—II கொரிந்தியர் 13 : 13

கிறித்தவர்கள் அருளை 'மோட்ச மகிமையின் வித்து' (Grace is the seed of glory.) எனக் கூறுகின்றனர்.

"அதனால்தான் அருள் என்பது' மோட்சமகிமையின் வித்து" என்று கூறப்படும். அருளின் முற்றிய கனிதான் மோட்ச மகிமை அல்லது கடவுளுடைய நேர்முக தரிசனம். "ஆகவே அருளுடன் இல்லாத ஆன்மாவுக்குப் பேரின்ப தரிசனம் கிடையாது என்பது கிறித்தவர்களின் விளக்கம்."

இதையே வள்ளுவரும் "வரன் என்னும் வைப்புக்கோர் வித்து" என அழகாகக் கூறுகிறார்.

இதற்கு விளக்கம் கொடுக்கும் நாகை. சொ. தண்டபாணிப் பிள்ளையவர்கள்,

"இவ்வுலகத்தில் 'வேட்கை வேர் வீழ்த்து முற்றிக் காதலுங் களிப்பு மென்னும் கவடு விட்டு அவலம் பூத்து' மாதுயர் இடும்பை காய்த்து மரணமே கனிய நிற்கும் விதையன்று."

"மேலுலகத்தில் பற்றற்றான் பற்றினைப் பற்றிப் பேரின்பக் கவடு விட்டு அறம் பூத்து அன்பு காய்த்து அருளேகனிய

நிற்கும் விதையென்பார், 'வன் என்னும் வைப்புக்கு ஓர் வித்து' என்ருர்'' எனக் கூறுகிருர்.

'அருளே கனிய நிற்கும் விதை' என்பதற்கு விளக்கமாக இயேசு பெருமானின் உவமை அமைந்துள்ளது.

“நான்திராட்சைக் கொடி.
நீங்கள் அதன் கிளைகள்.
ஒருவன் என்னுள்ளும்
நான் அவனுள்ளும் நிலைத்திருந்தால்
அவன் மிகுந்த கனி தருவான்.''

அருளப்பர். 15 : 5

''அதாவது கிளைகள் செடியிலிருந்து சாரத்தை இழுத்து உயிர் வாழ்வது போல, சகல மனிதரும் கிறிஸ்துவாகிய செடியிலிருந்து தேவ அருளாகிய சாரத்தை இழுத்து ஆன்ம தேவ உயிர் வாழ வேண்டும்'' என்பது கருத்து.”

அவ்வாறு தேவ அருளாகிய சாரத்தைப் பெருதவர்கள் ஆன்ம தேவ உயிர் உய்வு பெறுதல் இயலாது. ஆகவே, அவர் அருள் பெற்று மக்கள் உய்யுமாறு வள்ளுவரால் நீத்தர் பெருமை குறிக்கப்பட்டுள்ளது என நாகை. சொ. தண்டபாணிப் பிள்ளையவர்கள் கூறுகிருர்.

“இதனல் நீத்தார் ஒன்ருரைத் தெறும் ஆற்றலுடையாராயினும் உயிர்கள் மாட்டருளுடையர் என்பது கூறி உவந்தாரை ஆக்கும் ஆற்றலான் அவர் அருள் பெற்று மக்கள் உய்யுமாறு குறிக்கப்பட்டது.

“இவ்வதிகாரத்தில் முதல் எட்டுக் குறள்களாலும் எண் வகை அளவை கொண்டு நீத்தார் பெருமை நிலையிட்டு, ஒன்பதாவது குறளால் அவர் வெகுண்டால் வெகுளப்பட்டார் உய்வதரிதென்பதால் அவரைப் பிழையற்க என்றும்,

பத்தாவது குறளால் அவர் அருளுடையார் என்பதால் அவரை வழிபட்டுய்க என்றும் அறிவுறுத்தியருளினர் ஆசிரியர்" — தண்டபாணி விருத்தியுரை.

நாகை. சொ. தண்டபாணிப் பிள்ளையவர்களின் கருத்துப்படி அருளுடைய அவரை வழிபட்டவர் எவ்வாறு உய்வடைவர்?

"கடவுளிடமிருந்து பிறந்தவன் பாவஞ்செய்கிறதில்லை. ஏனெனில் அவர் இட்ட வித்து அவனுக்குள் நிலைத்திருக் கிறது. அவன் பாவத்தில் வாழ முடியாது."

"அவர் இட்ட வித்து — நம்மை ஆண்டவருக்கு உகந்த வராக்கும் அருள்."

I அருளப் 3 : 9

"நீங்கள் புதிதாய்ப் பிறந்துள்ளீர்கள் அப்பிறப்பு உங் களுக்கு அழிவுள்ள வித்தினல் அன்று, அழிவில்லாத வித்தினல் கிடைத்தது."

—1பேதுரு 1 : 23

கடவுளிடமிருந்து பிறந்தவன் என்ருல் பொருள் என்ன ?

"அன்பு கடவுளிடமிருந்து வருகிறது. அன்பு செய் பவன் எவனும் கடவுளிடமிருந்து பிறந்துள்ளான், அவனே கடவுளை அறிவான். அன்பு செய்யாதவனே கடவுளை அறிவ தில்லை. ஏனெனில் அன்பே கடவுள்." — I அரு. 4 : 8

ஆகவே, அன்பே கடவுள், அவர் இட்ட வித்தே நம்மை இறைவனுக்கு உகத்தவராக்கும் அருள். அருளில் நிலைத்திருக்கிறவர்கள் பாவத்தில் வாழ இயலாது.

“மாந்தர் அனைவருக்கும் மீட்பளிக்கும் கடவுளின் அருள் பிரசன்னமாகி நாம் இறைப்பற்றின்மையையும் உலக இச்சைகளையும் விட்டொழித்து விவேகத்தோடும் நீதியோடும், பக்தியோடும் இம்மையில் வாழ நம்மைப் பயிற்றுகிறது.” —தீத்து . 11-12.

ஆகவே,

“அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்”

அவ்வாறன்றி அருள் பெறாதவர்கள்

“பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்
அற்றார் மற்றாதல் அரிது.”

காரணம்,

“அருளிலாதார் பாவம் அறாமையின் அழிந்தாரே; பின் ஒருகாலத்தும் ஆதல் இல்லை” —பரிமேலழகர்.

“பாவம் கொடுக்கும் கூலி சாவு, கடவுள் அளிக்கும் அருட்கொடையோ நம் ஆண்டவராகிய கிறித்து இயேசுவுக்குள் முடிவில்லா வாழ்வு” — உரோமர் 6:23.

“மனிதன் தன் சொந்த ஆற்றலாலும் செயலாலும் கடவுளுக்கு ஏற்றவனாவதில்லை. கடவுளின் அருள் செயல் புரிவதால், அவ்வருளுக்கு மனிதன் மனமுவந்து அடிபணிவதால் கடவுளுக்கு ஏற்றவனாகின்றான். கடவுளின் அருளை ஏற்றுக்கொள்ளுதல் விசுவாசம் ஆகும்.”

—‘இறையருள் செயல் முறைக்கு’ அடிக்குறிப்பு
உரோமர் 1 : 27

“அந்த அருளாலேயே விசுவாசத்தின் வழியாக மீட்பு அடைந்திருக்கிறீர்கள். இது உங்களால் ஆனதன்று. கடவுளின் நன்கொடையே. —எபேசியர் 2 : 8

"கடவுள் தம்முடைய வல்லமையைச் செயல்படுத்தி எனக்களித்த அவருடைய அருட்கொடைக்கேற்ப, நான் அந்த நற்செய்தியின் பணியாளன் ஆக்கப்பட்டேன். கிறிஸ்துவின் அளவிட முடியாத செல்வங்களைப்பற்றிய நற்செய்தியைப் புறவினத்தாருக்கு அறிவிக்கவும், மறை பொருளான திட்டம் எதுவென்று வெளிப்படுத்தவும் இறை மக்கள் அனைவரிலும் சிறியோனுகிய எனக்கு அருள் அளிக்கப்பட்டது. — எபேசி 3 : 7-10

"கிறிஸ்துவே அந்த மறைபொருள். அவருள்ளே இறைவனின் ஞானமும், அறிவுமாகிய செல்வம் எல்லாம் மறைந்துள்ளன, போலி வாதங்களால் எவனும் உங்களை ஏமாற்றுதபடி இதை உங்களுக்குச் சொல்கிறேன்."

கொலோ 2 : 3-4

ஆகவே. எல்லாச் செல்வத்திலும் சிறந்தது அருட் செல்வமே. அதுவே இம்மை மறுமை ஆகிய இருமைக்கும் பயன்படுவது. பொருட் செல்வமோ இம்மைக்கு மட்டுமே பயன்படுவது. அது அற்ப மானவர்களிடமும் உண்டு.

"அருட் செல்வம் செல்வத்துட்செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள."

# 9. செவிச் செல்வம்

'அருட் செல்வம் செல்வத்துட் செல்வம்' எனக் கூறும் திருவள்ளுவர்

"செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை"

எனக் கூறக் காரணம் என்ன? அருட்செல்வம், செவிச்செல்வம் ஆகிய இரண்டில் உயர்ந்தது எது? என்று நோக்கினுல் அருட் செல்வத்தை விடச் செவிச் செல்வம் உயர்ந்ததுபோலக் கூறப்படுகிறதே. இதன் காரணம் என்ன? இப்படிக் கேள்விகள் எழுகின்றன. இது ஆழ்ந்து ஆய வேண்டிய ஒன்றே. இவ்விரண்டு குறட்பாக்களும் கூறப்பட்டுள்ள இடங்கள் நோக்கத் தக்கவை.

முதற்குறள் (241) அறத்துப்பாலில் துறவற இயலில் அருளுடைமை அதிகாரத்தில் கூறப்படுகிறது. இரண்டாம் குறள் (411) பொருட்பாலில் அரசியலில் கேள்வி என்னும் அதிகாரத்தில் கூறப்படுகிறது. இவை இரண்டும் இரண்டு அதிகாரங்களின் முதற் குறட்பாக்களே. ஒன்று துறவிக்குரியது. அடுத்தது அரசனுக்குரியது.

துறவிக்குரிய செல்வங்களுள் சிறந்தது
அருட்செல்வம்.

அரசனுக்குரிய செல்வங்களுள் சிறந்தது
செவிச் செல்வம்.

துறவிக்கொரு ஆட்சியுண்டு.

அரசனுக்கொரு ஆட்சியுண்டு.

துறவிக்குரிய ஆட்சி அருளாட்சி.

அரசனுக்குரிய ஆட்சி மண், பொன் ஆகிய பொருளாட்சி.

துறவிக்கொரு கடமை; அருள் செல்வத்தை ஆளுதல்.

அரசனுக்கொரு கடமை மண், பொன் போன்ற பொருட் செல்வத்தை ஆளுதல்.

இருவரும் தத்தம் கடமைகளைச் செவ்வனே செய்தல் வேண்டும். கடமையைச் சிறப்பாகச் செய்தவரே. பாராட்டுக்குரியவர்.

அரசனுக்குரிய மண் பொன் போன்ற பொருள் இவ்வுலகத்திற்குரியது. ஆகவே, இவ்வுலகில் அரசனுக்கு உயர்வு ஏற்படுகிறது.

துறவிக்குரிய அருள் மறு உலகத்திற்குச் சிறப்பாக உரியது. ஆகவே, மறுவுலக வாழ்வுக்குச் சிறப்பானவர் துறவி.

இங்கே ஒரு குறிப்பு ஆழ்ந்து நோக்கத் தக்கது.

அரசனுக்குரிய மண் பொன் போன்ற பொருள்களில் சிறந்தது எது?

வள்ளுவர் வைரத்தையோ மற்ற விலையுயர்ந்த பொருளையோ குறிப்பிடாமல், அரசனுக்குரிய மண் பொன் போன்ற பொருட்செல்வம் அத்தனையிலும் மாறுபட்ட செவிச் செல்வத்தைக் கூறக் காரணம் என்ன?

அரசனுக்குரிய செல்வங்களுள் எல்லாம் செவிச் செல்வமே சிறந்தது எனக் கூறக் காரணம் என்ன?

மற்ற அரசச் செல்வங்கள் அத்தனையும் அழியக் கூடியவை. ஆனல், செவிச் செல்வமோ அழியாமல் என்றும் நின்று பயன் தருவது; இம்மையிலும் மறுமை யிலும் பயன் தருவது; ஆகவே, அரசச் செல்வங்கள் அனைத்தையும் விடச் சிறந்தது செவிச் செல்வம் என அரசனுக்குக் கூறுகிருர் வான்புகழ் வள்ளுவர்.

ஏன் அரசனுக்குரிய அரசச்செல்வங்கள் அத்தனை யையும் விடச் செவிச் செல்வம் சிறந்தது?

அரசச் செல்வத்தையுடைய ஒருவன் செவியால் நல்லதைக் கேட்க வேண்டுமா?

"கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப்படாத செவி-"

நல்லதைக் கேட்காதவன், செவியிருந்தும் செவியற்ற வனே.

இயேசு பெருமான் கூற்று இங்கே நோக்கத் தக்கது.

"கேட்கச் செவியுள்ளவன் கேட்கட்டும்"

—மத்தேயு. 13:9.

"கேட்கச் செவியுள்ளவன் கேட்கட்டும்"
—மத்தேயு. 13:43.

"ஏன் அவர்களிடம் உவமைகளில் பேசுகிறேன் எனில், அவர்கள் கண்டும் காண்பதில்லை; கேட்டும் கேட்பதில்லை; உணர்வதுமில்லை. இசையாஸ் கூறியுள்ள இறைவாக்கு அவர்களிடம் நிறைவேறுகிறது.

"கேட்டுக் கேட்டும் நீங்கள் உணர்வதில்லை.
பார்த்துப் பார்த்தும் நீங்கள் காண்பதில்லை.
அவர்கள் கண்ணால் காணாமலும்
காதால் கேட்காமலும்
உள்ளத்தால் உணராமலும்
அவர்கள் மனந்திரும்பாமலும்
நான் அவர்களைக் குணமாக்காமலும் இருக்கும்படி
இம்மக்களின் உள்ளம் மழுங்கிவிட்டது;
இவர்கள் காது மந்தமாகி விட்டது;
கண்கள் மூடிக் கொண்டன."
—மத்தேயு. 13:13-15.

**அப்படியானால் கேட்டதனால் பயன் என்ன? என்பதற்கும் வள்ளுவர் விளக்கம் கொடுக்கிறார்.**

"எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்" —416.

**எனைத்தானும் நல்லவை அனைத்தானும் ஆன்ற பெருமை தரும். ஆகவே, ஆன்ற பெருமையைத் தருவது கேள்வி.**

"உங்கள் கண்களோ பேறுபெற்றவை; ஏனெனில் அவை காண்கின்றன. காதுகளும் பேறுபெற்றவை; ஏனெனில் அவை கேட்கின்றன." -மத்தேயு: 13:16:

ஆகவே 'ஆன்ற பெருமை' ஆகிய 'பேறு' அரசனுக்குரிய எல்லாச் செல்வங்களையும்விடச் செவிச் செல்வத்தாலேயே கிடைக்கிறது. ஆகவே, அரசனுக்குரிய

"செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்;
செல்வத்துள் எல்லாம் தலை."

காரணம் இச்செவிச் செல்வம் அளிப்பது அரசச் செல்வத்தினும் சிறந்த செல்வமாகிய 'ஆன்ற பெருமை'யைத் தரும் பேற்றை' யாகும். எவ்வாறு? இதே அரசச்செல்வமாகிய பொருள் மாறுந் தன்மையது. இருந்தது மறையலாம். மறைந்தது திரும்பலாம். ஆனல், சிறந்த பேருகிய அருள் இல்லாதார் அழிந்தாரே.

"பொருளற்ருர் பூப்பர் ஒருகால் அருளற்ருர்
அற்ருர் மற்ருதல் அரிது."

கேள்விச் செல்வத்தால் அருட்செல்வம் கிடைப்பது எவ்வாறு?

"அறிவிப்பதைக் கேட்பதால்தான் விசுவாசம் உண்டாகிறது என்பது தெளிவு." —உரோமர், 10:17

"தாங்கள் கேள்வியுருத ஒருவரை எவ்வாறு விசுவசிப்பர்? அறிவிப்பவன் இல்லையெனில் எவ்வாறு கேள்வியுறுவர்? அனுப்பப்படாமல் எவ்வாறு அறிவிப்பர்? இதைப் பற்றியே 'நற்செய்தி அறிவிப்பவர்களின் மலரடிகள் எத்துணை அழகானவை' என எழுதியுள்ளது."

உரோமர்: 10:14-15.

"கடவுளின் அருளை ஏற்றுக் கொள்ளுதல் விசுவாசம் ஆகும்." (இறையருட் செயல் முறைக்கு அடிக்குறிப்பு)

— உரோமர். 1-17.

"அந்த அருளாலேயே விசுவாசத்தின் வழியாக மீட்பு அடைந்திருக்கிறீர்கள். இது உங்களால் ஆனதன்று; கடவுளின் நன்கொடையே" —எபேசி. 2:8.

ஆகவே அரசனுக்குரிய பொருட் செல்வத்தைவிடச் சிறந்தது செவிச் செல்வம். காரணம் அது துறவிக்குரிய அருட் செல்வத்தைக் கொடுக்கிறது அருளே நீடுவாழ்வைத் தருகிறது.

"அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள."

"பொருளற்ருர் பூப்பர் ஒருகால் அருளற்ருர்
அற்ருர் மற்ருதல் அரிது."

"அருள்சேர்ந்த நெஞ்சினூர்க்கில்லை இருள்சேர்ந்த
இன்ன உலகம் புகல்,"

"பாவம் கொடுக்கும் கூலி சாவு, கடவுள் அளிக்கும் அருட்கொடையோ நம் ஆண்டவராகிய கிறிஸ்து இயேசுவுக்குள் முடிவில்லா வாழ்வு" – உரோமர், 6:23.

"முடிவில்லா வாழ்வுக்காக இறையருள் மனிதரை இறைவனுக்கு ஏற்புடையவராக்கி ஆட்சி செய்கிறது."

—உரோமர் 5:21.

# 10. அருளாட்சி

அருளாட்சி துறவிக்குரியது என்றால் அதன் விளக்கம் என்ன? அருளுடைமைக்கும் அருளாட்சிக்கும் வேற்றுமையுண்டா? அருளே நீடுவாழ்வைக் கொடுப்பதானால் அது துறவிகள் அல்லாத மற்றவர்களுக்கு வேண்டா என எவ்வாறு கூற முடியும்? அருள் உலக மக்கள் அத்தனை பேருக்கும் வேண்டியதுதானே? அப்படியானால் துறவிகளுக்கும் அருளுக்கும் உள்ள தொடர்பு என்ன? அருளுடைமையில் இல்லறத்தானின் பங்கு என்ன? இவை போன்ற கேள்விகளுக்கு இப்போது விடை காண்போம்.

நாம் இந் நூலின் தொடக்கத்தில்

அருளைப் படைப்பவர்,

அருளை ஆளுகிறவர்,

அருளைப் பெற்றுக் கொள்ளுகிறவர்,

ஆகிய மூவகையினரைப் பார்த்தோம். அருளை ஆளுகிறவரே துறவியர் என்பதை வள்ளுவர் வாயிலாகவே அறிந்தோம்.

"நல்லாற்றால் நாடி அருளாள்க" —242
"மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற்கு இல்லென்ப" —244
"அல்லல் அருளாள்வார்க்கு இல்லை." —245
"எங்ஙனம் ஆளும் அருள்" —251
"அருளாட்சி ஆங்கில்லை ஊன் தின்பவர்க்கு" —252.

அன்பாகிய கடவுளின் குழந்தையே அருள் என்பது "அருளென்னும் அன்பீன் குழவி" என்பதால் தெளிவு படுத்தப்படுகிறது. ஆகவே, அன்பாக இருந்து அருளைப் படைப்பவர் கடவுளே என்பது வெளிப்படை.

அருளைப் படைப்பவர் கடவுள்.
அருளை ஆளுகிறவர் துறவி.

அப்படியானல் அருளைப் பெற்றுக்கொள்பவர் யார்? உலக மக்கள் யாவருமே என்பது வெளிப்படை. அப்படியானல் இல்லறத்தான் கடவுளின் அருளைப் பெற்றுக்கொள்ள துறவறத்தானிடம்தான் செல்ல வேண்டுமா? அபபடியானல் கடவுள் பார்வையில் இல்லறத்தைவிடத் துறவறம் உயாந்தது என்பது பொருளா? அப்படியானல் இல்லறம் இழிவுடையதா? இத்தகைய கேள்விகள் எழுகின்றன,

இல்லறம் துறவறம் இவை இரண்டில் எது உயர்ந்தது, எது தாழ்ந்தது என்ற கேள்விக்கே கிறித்தவமாகிய வள்ளுவத்தில் இடம் இல்லை என்பதை முன்பு கண்டோம். இரண்டும் இருவேறு கடமைகள். இல்லறத்தானின் கடமையில் சிறந்தது எது?

"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு."

"பெறுமவற்றுள் யாம் அறிவதில்லை அறிவறிந்த
மக்கள்பேறல்ல பிற."

ஆகவே, இல்லறத்தின் நற்கனியாக விளங்கும் நன் மக்கட்பேருகிய அறிவறிந்த மக்களிலிருந்தே துறவி

கள் தோன்றுகிறார்கள். துறவிகளைத் தோற்றுவிக்க வேண்டிய கடமையே இல்லறத்தானிடம்தான் இருக்கிறது. ஆகவே, நன்மக்களாகிய துறவிகளுக்குக் கிடைக்கும் சிறப்புகள் யாவும் பெற்றோராகிய இல்லறத்தாருக்குக் கிடைப்பவையே. ஆகையால்தான்,

"தம்மில் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது."

எனத் தெளிவுபடுத்துகிறார் வள்ளுவர்.

ஆகவே, எது உயர்ந்தது? எது தாழ்ந்தது? என்ற கேள்விக்கே வள்ளுவத்தில் இடம் இல்லை; இரண்டும் இரு வேறு கடமைகள்.

அருளாட்சி துறவிகளுக்குரியது எனக்குறிப்பிட்ட போதிலும் அருளை இல்லறம் துறவறம் ஆகிய இரு சாராருக்கும் பொதுவாகவே வள்ளுவர் கூறுகிறார் என்பது நாகை சொ. தண்டபாணிப்பிள்ளையவர்களின் கருத்து.

"இல்லறத்தினின்று செய்து பழகிய அன்பின் முதிர்ச்சியேஇஃதாதல் அருளென்னும் அன்பின் குழவி" என்பதாற் பெறக்கிடந்தது. இவ்வாற்றான் இல்லறத்தையும் துறவறத்தையும் இயைபு படுத்தி நிற்பதாதாலும் துறவறத்தின் அடிப்படையாதலாலும் இஃது ஈண்டுக் கூறப்பட்டது" —தண்டபாணி விருத்தியுரை

அருள் தோன்றுவதற்குக் காரணமான அன்பை இல்லறத்தில் கூறியிருப்பது நோக்கத்தக்கது.

இல்லறத்திற்குரியது அன்பு.

துறவறத்திற்குரியது அருளாட்சி.

அன்பின் குழந்தை அருள்.

இல்லறத்தானின் குழந்தை துறவி.

ஆகவே, ஒன்றுடன் ஒன்று மாறுபட்டது அன்று. அவைகளுக்கிடையே உயர்வு தாழ்வு இல்லை. எனவேதான் அருளுடைமை என்னும் அதிகாரம் இல்லறத்தின் முடிவிலும் துறவறத்தின் தொடக்கத்திலும் வைக்கப்பட்டுள்ளது. அருள் இல்லறத்திற்கும் துறவறத்திற்கும் பொதுவானதே; உலக மக்கள் யாவருக்கும் பொதுவானதே.

இப்போது துறவிகளுக்குரிய அருளாட்சி என்றால் என்ன? என்பதை நோக்குவோம். இதற்கும் முன்பு நாம் கண்ட பொருளாட்சி என்பதன் விளக்கமே பொருந்தும்.

ஆட்சி — பெற்றுக்கொள்ளுதல்
— காத்தல்
— பயன்படுத்தல்
— பெருக்குதல்

இறைவனிடம் அருளைப் பெற்றுக்கொள்ளுதல், கிடைத்த அருள் தன்னிடம் நிலைக்குமாறு தன் கடமைகளைச் சரிவரச் செய்வதால் காத்துக்கொள்ளல், தான் பெற்றுக்கொண்ட அருள் தனக்கும் மற்றவர்களுக்கும் ஆன்மீக நன்மையை விளைவிக்கும்படியாக உரிய வழிகளில் பயன் படுத்தல், பேரின்ப நிழலைத் துய்த்தல்,

மற்றவர்களுக்கும் அருள் கிடைக்குமாறு வேண்டுதல் முதலான வழிகளில் செயல் பட்டு மற்றவர்களும் அருளைப் பெறுவதால் உலகில் இறைவன் அருள் பெருகுமாறு பணிபுரிதல் ஆகிய இப் பணிக்கு அருட் சாதனங்கள் கருவிகளாய் விளங்குகின்றன. இறை வனுடைய அருளைப் பெறுவதற்குக் கருவிகளாய் இருப்பவை இவ்வருள் சாதனங்களே. இவ்வதிகாரம் அருளாட்சியுள் அடங்கும். ஆகவே, அருளைப் பெற்றுக் கொள்ளுதல், காத்துக்கொளஎல், பயன்படுத்தல், அருட் சாதனங்களால் பணிபுரிதல் ஆகிய இவைகளே துறவி களின் தலையாய கடமைகள். இக்கடமைகளைச் செவ் வனே செயல் படுவதே அருளாட்சி. இக் கடமைக் கென்று தன்னை முழுவதும் ஒப்படைத்து வாழ்கிறவர் களே அருளாட்சிப்பணிபுரியும் துறவிகள்.

இறைவனின் அருளைப் பேராற்றுக்கும் மக்களை வயல்களுக்கும் ஒப்பிட்டால் ஆற்றையும் வயலையும் இணைக்கும் இணைப்புப் பாலமாக ஆற்றுநீர் வயல் களுக்கு வரப் பயன்படும் வாய்க்கால்களாகப் பயன் படுபவர்களே துறவிகள்.

வயலுக்குரிய கடமை வேறு.

வாய்க்காலுக்குரிய கடமை வேறு.

இல்லறத்தின் கடமை வேறு. துறவறத்தின் கடமை வேறு.

வயலிலும் வாய்க்காலிலும் ஓடும் நீர் ஒன்றே.

இல்லறத்திலும் துறவறத்திலும் இயங்கும் அருள் ஒன்றே.

நீரை முதலில் தான் பெற்று தகுந்த வழியில் வயலுக்குக் கொடுக்க வேண்டிய பொறுப்பு வாய்க் காலுக்குண்டு.

அருளை முதலில் தான்பெற்று தகுந்த வழியில் இல்லறத்தானுக்குக் கொடுக்க வேண்டிய பொறுப்பு துறவறத்தானுக்குண்டு. அதுவே அருளாட்சி.

ஆற்றில் நீர் இன்றேல் வாய்க்காலாலும் பயன் இல்லை; வயலாலும் பயன் இல்லை.

கடவுளின் அருள் இன்றேல் இல்லறத்தாலும் பயன் இல்லை; துறவறத்தாலும் பயன் இல்லை.

ஆகவே, பயன் விளைவிப்பது நீர். கருவிகள் வாய்க்கால், வயல் ஆகியவை.

அவ்வாறே பயன் விளைவிப்பது அருள்.

கருவிகள் இல்லறம் துறவறம் ஆகியவை.

கடவுளுக்கு ஏற்புடையதைச் செய்வதற்குரிய கருவி களே இவை.

"கடவுளுக்கு ஏற்புடையதைச் செய்வதற்குரிய கருவி களாய் உங்கள் உறுப்புக்கள் இருக்கட்டும். பாவம் உங்கள் மீது ஆட்சி செலுத்தல் ஆகாது. நீங்கள் இறையருளின் அதிகாரத்திலே இருக்கிறீர்கள் —உரோமர் 6:13-14.

"கடவுளுடைய பலவகைப்பட்ட அருளின் சீரிய கண்காணிப் பாளர் எனக் கிடைத்த வரத்தைப் பிறர்க்குப் பணி புரியப் பயன்படுத்துங்கள்." —1 இராயப்பர் 4:10

"தாயின் வயிற்றில் இருந்தபோதே என்னைத் தேர்ந்தெடுத்துத் தமது அருளால் என்னை அழைத்த இறைவன், தம் மகனைப் பற்றிய நற்செய்தியை நான் புறவினத்தார்க்கு அறிவிக்கும்படி அம்மகனை எனக்குள் வெளிப்படுத்தத் திருவுளங் கொண்டார்." —கலாத்தியர் 1:15-16

"புறவினத்தார் அனைவரும் கீழ்ப்படிந்து விசுவாசிக்குமாறு, அப்போஸ்தலப் பணிபுரியும் திருஅருளை இவருடைய பெயரின் மகிமைக்காக இவர் வழியாகவே பெற்றுக்கொண்டோம்." —உரோமர் 1:6-7

"நமக்கு அளிக்கப்பட்டுள்ள அருளுக்கேற்ப வெவ்வேறு வரங்களைப் பெற்றுள்ளோம்." —உரோமர் 12:6

"கடவுளி நற்செய்தியை அறிவிப்பதே நான் செய்யும் திருத்தொண்டு ; அதுவே என் குருத்துவப்பணி."
—உரோமர் 15:16

# 11. அருட் செல்வம்

"கடவுள் தம்முடைய வல்லமையைச் செயல் படுத்தி எனக்களித்த அவருடைய அருட்கொடைக் கேற்ப நான் அந்த நற்செய்தியின் பணியாளன் ஆக்கப்பட்டேன். கிறிஸ்துவின் அளவிட முடியாத செல்வங்களைப் பற்றிய நற்செய்தியைப் புறவினத்தார்க்கு அறிவிக்கவும் மறைபொருளான திட்டம் எதுவென்று வெளிப்படுத்தவும் இறைமக்கள் அனைவரிலும் சிறியோனாகிய எனக்கு அருள் அளிக்கப்பட்டது." —எபேசியர் 3:7-10

"கிறிஸ்துவே அந்த மறை பொருள். அவருள்ளே இறைவனின் ஞானமும் அறிவுமாகிய செல்வம் எல்லாம் மறைந்துள்ளன. போலி வாதங்களால் எவனும் உங்களை ஏமாற்றாதபடி இதை உங்களுக்குச் சொல்லுகிறேன்."

—கொலோசெயர் 2:3-4

"ஆம் என் ஆண்டவராம் கிறிஸ்து இயேசுவை அறிதலாகிய ஒப்பற்ற செல்வத்தின் பொருட்டு மற்றவற்றையெல்லாம் இழப்பு எனக் கருதுகிறேன். நான் அனைத்தையும் இழந்து விட்டேன். கிறிஸ்துவை ஆதாயமாக்கிக் கொள்ளவும், அவரோடு ஒன்றித்திருக்கவும் எல்லாவற்றையும் குப்பை எனக்கருதுகிறேன்." —பிலிப். 3;8

"அருட்செல்வம் செல்வத்துட்செல்வம் பொருட்
செல்வம் பூரியார் கண்ணும் உள."

"இயேசு பெருமானின் அருளாட்சி ஐரோப்பாவில் பரவிய காலத்தில்தான் அருள் நெறியும், தவறு செய்

தோரை மன்னிக்கும் மனப்பான்மையும் அங்கு வாழ்ந்த மக்கள் உள்ளத்தில் இடம் பெறத் தொடங்கியதாகச் சாித்திரம் பேசுகிறது.''
—க. த. திருநாவுக்கரசர்
திருக்குறள் நீதி இலக்கியம் பக். 146:147

''ஒருயிர் தனக்கினிய ஒருயிரின் பொருட்டுத் தியாகஞ் செய்வதைக் காண்கிறேம்; கேட்கிறேம்; இது காமிய அன்பு; கட்டுப் பட்ட அன்பு. கிறிஸ்து பெருமான் மற்ற உயிர்களின் பொருட்டுத் தாமே பலியானுர். இதுவே நிட்காமிய அன்பு; கட்டற்ற அன்பு. உயிர்களேல்லாம் பாவத்தினின்றும் விடுதலையடைதல் வேண்டுமென்ற பெருங் காதலால் கிறிஸ்து தம்மையே தியாகஞ் செய்தனர் இத் தியாகத்துக்கு அடிப்படை காதல். காதல் வடிவம் கிறிஸ்து. கிறிஸ்து காதல் மணவாளன். நாம் காதல் மணவாட்டிய ராதல் வேண்டும். கிறிஸ்துவைக் காதலித்து அவரை வழிபடுவோம்; நாம் அன்பாவோம்; தொண்டாவோம்; தியாக மாவோம்.''
திரு. வி. கலியாணசுந்தரனுர் உள்ளொளி - பக் - 105.

இவ்வுலக வாழ்நாள் எல்லாம்
நான்உமக்காய் வாழவும்,
அன்பு, தியாகம், அருள், பக்தி
அனேத்தும் பெற்றேங்கவும்
பாவ அழுக்கெல்லாம் நீக்கித்
தூய பாதை செல்லவும்
ஆண்டவா உம் அருள் தாரும்
அடியேனே ஆட்கொள்ளும்''

பாமாலே - 73

## திருக்குறள் ஆராய்ச்சியில் இதுவரை வெளிவந்துள்ள இவ்வாசிரியரின் நூல்கள்.



1 திருவள்ளுவர் கிறித்தவரா?

2 ஐந்தவித்தான் யார்?

3 வான் எது?

4 நீத்தார் யார்?

5 சான்றோர் யார்?

6 எழுபிறப்பு—?

7 மூவர் யார்?

8 அருட்செல்வம் யாது?



தமிழ் இலக்கியக் கழகம்

திருச்சி–620001.